# முன்னுரை

கவிஞர்கள் மனம் கனிந்து பாடும் பாடல்கள் நல்ல வடிவுடன் ஆழ்ந்த பொருளுடன் விளங்குகின்றன. அவற்றில் மனத்தால் ஒன்றிப் போனால் எங்கெங்கோ செல்லலாம். பாடலாகிய வாசலின் வழியே நுழைந்து பல அழகிய காட்சிகளைக் காணலாம். செறிவும் உணர்ச்சியும் உடைய அத்தகைய பாடல்களைப் பல மணி நேரங்கள் பாடிப் பாடி இன்புறலாம். பொருள் வளத்தைச் சிந்தித்துச் சிந்தித்து மகிழலாம்.

இந்தப் புத்தகத்தில் உள்ள கட்டுரைகளில் பெரும்பாலன அவ்வாறு சிந்தித்ததனால் உண்டான விளைவுகளே. முதல் இரண்டு கட்டுரைகளும் விநாயகப் பெருமானைப் பற்றியவை. ஏனையவை முருகப் பெருமானைப் பற்றியவை. முதல் கட்டுரையும் முடிவுக் கட்டுரையும் திருவிளையாடற் புராணத்தில் வரும் இனிய செய்யுட் களினூடே புகுந்து சிந்தித்த சிந்தனைச் சித்திரம்.

8 முதல் 18 வரையில் உள்ள கட்டுரைகள் சேந்தனார் பாடிய திருவிடைக்கழித் திருவிசைப்பாவிலுள்ள பதினொரு பாடல்களின் விளக்கம். முருகனைக் காதல் நாயகனாக வைத்துப் பாடிய பாடல்கள் அவை. அவற்றை உரையாடலாக விரித்து விளக்கி யிருக்கிறேன். பதினொரு பாடல்களுக்கும் ஒருவகையில் தொடர்பும் கூற முயன்றிருக்கிறேன்.

திருமுறைகளில் பல இடங்களில் முருகனைப் பற்றிய குறிப் புக்கள் இருக்கின்றன. அவற்றை யன்றி ஒன்பதாம் திருமுறையில் ஒரு பதிகமும், பதினோராந் திருமுறையில் ஒரு நூலும் முருகனைப் பற்றியனவாக உள்ளன. பதினோராந் திருமுறையில் உள்ளது நக்கீரர் பாடிய திருமுருகாற்றுப்படை. ஒன்பதாந் திருமுறையாகிய திருவிசைப்பாவில் உள்ளது, இதிலுள்ள திருவிடைக்கழிப் பதிகம். இங்ககாலத்துக்குப் பின் தோன்றிய முருகனுடைய துதிகளில் சந்தப் பதிகமே பழையதென்று சொல்லலாம்.

யான் கண்ட நிகழ்ச்சியைக் கூறும் கட்டுரை ஒன்றும், அருணகிரியார் திருவுள்ளத்தைப் பற்றி ஆராயும் கட்டுரை ஒன்றும், முருகன் அழகைப் பற்றியது ஒன்றும் இதில் இடம் பெறுகின்றன.

இதில் காணும் பாடல்கள் இலக்கியச் சிறப்பும் பக்திச் சுவையும் இணைந்தவை. அன்பர்களின் மனப்பெட்டகத்தில் வைத்துப் போற்றுவதற்குரியவை.

சித்தி வேழம் என்ற கட்டுரை தினமணி - கதிரிலும், கிழவியும் காதம் என்பது கல்கியிலும், யானைக்கும் கலங்கார் என்பது திருச்செந்தூர்க் கும்பாபிஷேக மலரிலும், முருகன் அழகு என்பது கந்தன் மலர் என்ற வெளியீட்டிலும், இடும்பைக் குன்று என்பது முருகன் மலரிலும், தொட்டிலில் வளரும் முருகன் என்பது குமர குருபரனிலும், மற்றவற்றில் இறுதிக் கட்டுரையை யன்றிப் பிற யாவும் திருப்புகழ் அமிர்தத்திலும் வந்தவை.

இவற்றை வெளியிட்ட பத்திரிகையாளருக்கும் வெளியீட்டாளருக்கும் என் நன்றி உரியது.

"காந்தமலை"
கல்யாணநகர், சென்னை-28

கி. வா. ஜகந்நாதன்
24—1—61

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| 1. | சித்தி வேழம் | ... 1 |
| 2. | கிழவியும் காதம் | ... 7 |
| 3. | யானைக்கும் கலங்கார் | ... 13 |
| 4. | அருணகிரியாரின் திருவுள்ளம் | ... 20 |
| 5. | கால தரிசனம் | ... 38 |
| 6. | இடும்பைக் குன்று | ... 43 |
| 7. | தொட்டிலில் வளரும் முருகன் | ... 47 |
| 8. | சேந்தன் காதல் | ... 52 |
| 9. | எழில் கவர் கள்வன் | ... 60 |
| 10. | மேகலை கவர்பவன் | ... 64 |
| 11. | இடர் பயப்பது குணமா? | ... 70 |
| 12. | இது அழகோ? | ... 77 |
| 13. | அருளுவானோ? | ... 82 |
| 14. | ஐயுறும் வகை | ... 87 |
| 15. | மடல் தொடங்கினாள் | ... 93 |
| 16. | குறமகள் இறைவன் | ... 99 |
| 17. | கோமளக் கொழுந்து | ... 104 |
| 18. | பயன் | ... 109 |
| 19. | முருகன் அழகு | ... 113 |
| 20. | வேல் எடுத்த வேள் | ... 129 |

# சித்தி வேழம்

அரண்மனை வாசலில் யானையைக் கட்டியிருப்பார்கள். அரனுடைய மனையாகிய கோயிலிலே கூடத் திருவாசலில் ஒரு யானை இருக்கிறது. அரண்மனை வாசல்யானை மதம் கொள்ளும்; துதிக்கையாகிய ஒரே கையை உடையது. அரன் கோயில் வாசலில் உள்ள யானை மதத்தை அழிப்பது; ஐந்து கைகளை உடையது. அந்த யானை கடவுள் வரிசையைச் சேர்ந்தது. கணபதியாகிய ஆனைமுகக் கடவுளே அந்த யானை.

சைவர்கள் எந்தக் காரியத்தைச் செய்யத் தொடங்கினாலும் விநாயகரை வணங்கிவிட்டே செயலிற் புகுவது வழக்கம். நூலாசிரியர்கள் சைவர்களாக இருந்தால் கணபதிக்கு ஒரு துதி பாடி விட்டுப் பின்பு நூலை நடத்துவார்கள். வேறு வகையிலும் விநாயகருடைய துதிகளாகப் பல பாடல்கள் தமிழில் இருக்கின்றன. அவை புலவர்களின் கற்பனைக்கும் கவியாற்றலுக்கும் ஏற்றபடி வெவ்வேறு சுவையுடன் அமைந்திருக்கும்.

ஒரு புலவர் சித்தி விநாயகராகிய யானையைப் பாடித் துதிக்கிறார். அவரை நேரே துதிக்காமல், 'சித்தி விநாயகக் கடவுளை வணங்கிப் பாவங்களைப் போக்கிக் கொள்வோம்' என்று படர்க்கையில் வைத்துச் சொல்கிறார்.

சித்தி விநாயகரைச் சித்தி வேழம் என்று அவர் பாடுகிறார். விநாயகக் கடவுள் யானை முகத்தை உடையவரேயானாலும், உம்புக்குள் சிறந்ததாகிய முகத்தைக் கொண்டு அவரை யானையென்று கூறுவது வழக்கமாகிவிட்டது. புல

வர் விநாயகரை யானையென்று சும்மா சொல்லி விடவில்லை. யானை கட்டும் கூடம், அதைக் கட்டும் தறி, சங்கிலி, அதற்கு இடும் கவளம் ஆகியவற்றோடு கொண்டுவந்து நிறுத்து கிறார்.

இந்த யானை உலகத்தில் உள்ள யானையைப்போல, மனிதன் கட்டிய யானைப் பந்தியில் வளர்வது அன்று. இது மிகப் பெரிய யானைதான். ஆனாலும் மிகச் சிறிய இடத்தி லும் நுழைந்து கொள்ளும். இதற்குப் புதிய கூடத்தைக் கட்ட வேண்டும் என்பது இல்லை. இருக்கிற இடத்தைக் கொடுத் தாலே போதும். அன்பர்கள் தம்மிடம் உள்ள சிறிய இடத் தில் இந்த யானையைக் கட்டிப் போடுகிறார்களாம். அந்தக் கூடம் எது தெரியுமா? அன்பினால் நினைக்கும் உள்ளந்தான். உள்ளம் சிறிதா, பெரிதா? அது நுட்பமாக இருப்பதால் சிறியதென்றே சொல்ல வேண்டும். அணு என்று தர்க்க நூல் கூறுகிறது. ஆனால், அது கொள்ளுகிற ஆசை யைப் பார்த்தால் அதற்குச் சமமான விரிவை உடைய பொருள் ஒன்றுமே இல்லையென்று தோன்றுகிறது.

உள்ளமாகிய கூடத்தில் அன்பர்கள் சித்தி வேழத்தை வளர்க்கிறார்கள். அதைக் கட்டுவதற்கு ஒரு முளை வேண்டும் அல்லவா? விடாமுயற்சியாகிய முளையை அடிக்கிறார்கள். அந்த முளையிலே கட்டிப்போடச் சங்கிலி வேண்டும். இந்த யானை மிகவும் விருப்பத்தோடு கட்டப்படும் சங்கிலி ஒன்று இருக்கிறது. அது அன்பு. அன்பு இருந்தால்தான் இந்த வேழத்தைக் கட்டலாம். உள்ளமாகிய கூடத்தில் ஊக்கமா கிய தறியை நட்டு, அன்பென்னும் சங்கிலியினால் சித்தி வேழத்தைக் கட்டிப் போடுகிறார்கள் அன்பர்கள்.

> உள்ளமெனும் கூடத்தில் ஊக்கமெனும் தறிநிறுவி
> உறுதி யாகத்
> தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
> இடைப்படுத்தி.

அன்பு என்னும் சங்கிலித் தொடரை அந்த யானையால் தள்ள முடியாதாம். அதனால் அதை உறுதியாகக் கட்டி விடலாமாம்.

யானைக்குக் கூடம் கட்டி முளையடித்துச் சங்கிலியால் பிணித்துவிடலாம். சாது யானையாக இருந்தால் இப்படிச் செய்வது எளிதாக இருக்கும். ஆனால், வேறு ஒரு சங்கடம் இருக்கிறது. சாதுவான யானையால் யாருக்கும் தீங்கு இல்லை. அது கட்டுத்தறியை முறிக்காது. மதம் கொள்ளாது. ஆனால், அது தீனி தின்னமல் இருக்க முடியாதே! 'ஆனையைக் கட்டித் தீனி போட ஆராலே முடியும்?' என்று ஒரு பழமொழி வழங்குகிறது. ஏழைக்கு ஒரு யானையைப் பரிசாக அளித்து விட்டால், அதைக் காட்டிலும் துன்பம் வேறு வேண்டாம் அவனுக்கு.

ஒரு புலவன் மிக்க வறுமையினால் ஓர் அரசனிடம் போய் அவனைப் பாடினான். "நாள்தோறும் உண்ணும் உணவுக்கே வழி இல்லாமல் திண்டாடுகிறேன்" என்றானாம். அந்த அரசன் அவனை உபசரித்துச் சில நாள் வைத்திருந்து, ஊருக்குப் போகும் போது ஒரு யானையை வழங்கி, "இதைக் கொண்டு போம்" என்றானாம். அதைக் கண்டவுடன் புலவனுக்கு வியப்பும் அச்சமும் உண்டாயின. "எனக்கா இந்த யானை?" என்று கேட்டான். "ஆம்" என்றான் அரசன். "நான் ஒரு வாய்க்கே சோறு இல்லாமல் திண்டாடுகிறேன். இந்த நால்வாய்க்கு உணவு தேடி எப்படிக் கொடுப்பேன்!" என்றான் புலவன். நால்வாய் என்பதற்கு யானை என்று பொருள். தொங்கும் வாயையுடைமையால் அந்தப் பெயர் வந்தது. நான்கு வாய்கள் என்ற பொருள் உடையதைப் போலவும் அந்தப் பெயர் இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு புலவர் நயமாகப் பேசினார். அதைக் கேட்ட மன்னன், உடனே உணவுக்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்தானாம்.

யானைக்கு உணவளித்துப் பாதுகாப்பது எவ்வளவு அருமை என்பதை இந்தக் கதை தெரிவிக்கிறது.

இந்தச் சித்தி வேழத்துக்கு யார் தீனி போடுவது? பிள்ளையாருக்குத் 'தொப்பையப்பன்' என்பது ஒரு பெயர். எத்தனை நிவேதனம் செய்தாலும் வாரிச் சுருட்டி வயிற்றுக்குள் திணிக்கும் இயல்புடையவர் அவர். அவருக்கு உணவு போட்டுக் கட்டுமா?

சித்தி வேழத்தைக் கண்டு அப்படி அஞ்சவேண்டியதில்லையாம். அதற்குக் கவளமாகக் கொடுக்க நாம் எதையும் தேடவேண்டியதில்லை. இருக்கிற பொருளையே கொடுக்கலாம். நம்மிடம் மிகுதியாக இருக்கும் பொருளைக் கொடுத்தால் மகிழ்ந்து உண்ணும் இந்த யானை.

நம்மிடம் இருக்கும் அந்தப் பொருளால் நமக்கு இன்பம் இல்லை; துன்பந்தான் விளைகிறது. உண்மையைச் சொல்லப் போனால் அந்தப் பொருள் நம்மிடம் இருப்பதனால்தான் நமக்கு எல்லா வகையான துன்பங்களும் விளைகின்றன. மேலும் மேலும் பிறந்து பிறந்து சாவதற்குக் காரணமே அந்தப் பொருள்தான். அதற்குப் 'பசுபோதம்' என்று பெயர். நம்மை அறியாமல் நம்மிடம் இருந்து பல தீவினைகளைச் செய்யச் செய்து அலைக்கழிக்கிறது. இறைவனை உணரமாட்டாமல், இந்த உலக வாழ்வே நித்தியம் என்று நினைக்கச் செய்கிறது. செம்பிலே களிம்பு இருப்பது போல நம்மிடம் இது இருக்கிறது. இது கழன்று போனால் நமக்கு இன்பம் உண்டாகும். இந்தக் கள்ள வினைப் பசுபோதத்தையே, சித்தி வேழத்துக்குக் கவளமாக இட்டுவிட்டால் இரண்டு நன்மைகள் உண்டாகின்றன. ஒன்று, நமக்குத் துன்பம் தரும் பொருள் நம்மை விட்டுப் போகிறது; மற்றொன்று, சித்திவேழத்துக்குக் கவளம் கிடைக்கிறது. ஒரே கல்லில் இரண்டு மாங்காய்களை வீழ்த்துவது போன்ற செய்கை இது.

'இதென்ன, வேடிக்கையாக இருக்கிறதே! அழுகற் பழம் ஐயருக்கு என்பது போல, நமக்கு வேண்டாதது ஒன்றை விநாயகருக்குக் கொடுப்பதாவது! அதனால் அவருக்குக் கோபம் பிறக்காதா? கவளம் இடும்போது கல்லையிட்டால் யானை நெடுநாள் வைத்திருந்து இட்டவனைச் சாடும் என்று கேட்டிருக்கிறோமே! நமக்கு வேண்டாத, அழுக்கான பண்டத்தைச் சித்தி வேழம் ஏற்றுக்கொள்ளுமா?'

இவ்வாறு பல கேள்விகள் எழுவதற்கு இடம் உண்டு. ஆனால் உண்மையாக, நமக்குத் தீங்கு பயக்கின்ற கள்ளமாகிய வினைகளுக்குக் காரணமாகிய பசுபோதத்தை (சிற்றறிவை)க் கவளமாக்கி விட்டால் இந்த யானை மகிழ்ச்சியோடு உண்ணும். 'இவனுக்கென்று வேறு ஒன்றும் சொந்தமாக இல்லை. பல காலமாக இவன் வைத்திருப்பது இந்த அழுக்கு மூட்டைதான். இதை விடாமல் பற்றிக் கொண்டிருந்தான். இப்போது அந்தப் பற்றை நீக்கிக் கொடுத்துவிட்டானே!' என்று எண்ணிக் களிப்புடன் உண்ணுமாம்.

நல்ல உணவை மிகுதியாக உண்டு வளரும் களிற்றுக்குக் கொழுப்பு அதிகமானால் மதம் உண்டாகும். அந்த மதம் பிறருக்குத் தீங்கை உண்டாக்கும். இந்தத் தெய்வ யானையும் நாம் அளிக்கும் பசுபோதக் கவளத்தை உண்டு களிப்பை அடையும்; அதனால் அதற்கும் மதம் வெள்ளம் போல உண்டாகும். அது கருணை யென்னும் மதம். கருணையினால் நமக்கு நன்மையே யன்றித் தீங்கு இல்லை.

**......தறுகட் பாசக்**
**கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்**
**களித்துண்டு கருணை என்னும்**
**வெள்ளதம் பொழிசித்தி வேழம்.**

[தறுகட்பாசக் கள்ள வினைப் பசுபோதம் - கொடுமையையுடைய பாசமாகிய கள்ளத் தன்மையையுடைய வினைக்குக் காரணமாகிய ஜீவபோதம்; சிற்றறிவு அல்லது அறியாமை.]

நாம் அளிப்பது, நமக்குக் கொடுமையைச் செய்யும் அழுக்குப் பண்டம். அதைப் பெற்றுக்கொள்வதோடு மிகவும் உவகையை அடைந்து அந்த யானை தருவதோ, நமக்கு எல்லா நன்மைகளையும் அளிக்கும் கருணை! இப்படியும் நடக்குமா?

இதில் வியப்பு ஒன்றும் இல்லை. உயர்ந்த சாதி ரோசாச் செடியை ஒரு தோட்டத்தில் ஒருவன் வளர்க்கிறான். அதற்கு நாற்றமுள்ள எருவைக் கொண்டுவந்து போடுகிறான். அதனை ஏற்றுக்கொண்ட அச் செடி மிகவும் மணமான மலரை அளிக்கின்றது. 'நான் இன்ன எரு வைத்தேன்; செடி பூத்துக் குலுங்குகிறது' என்று தோட்டக்காரன் மகிழ்ச்சியுடன் சொல்கிறான். ஓரறிவுடைய செடிக்கு நமக்குப் பயன்படாத நாற்றப் பொருளை அளித்தால், நேர் மாறான மணமுள்ள மலரை அது நமக்கு அளிக்கிறது. அப்படியானால், ஞானமயமான கணபதி நாம் அளிக்கும் பசு போதத்தைப் பெற்று, நமக்குக் கருணையைத் தருவதில் என்ன வியப்பு இருக்கிறது?

உள்ளமெனும் கூடத்துள் ஊக்கமெனும்
தறிநிறுவி உறுதி யாகத்
தள்ளரிய அன்பென்னும் தொடர்பூட்டி
இடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக்
களித்துண்டு கருணை என்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை
நினைந்துவரு வினைகள் தீர்ப்பாம்.

[நினைந்து - தியானம் செய்து. வருவினைகள் - வருகிற பாவத்தின் விளைவுகளை. தீர்ப்பாம் - போக்குவோமாக.]

இது பரஞ்சோதி முனிவர் பாடிய திருவிளையாடற் புராணத்தில் வரும் பாட்டு.

# கிழவியும் காதம்

எந்தக் காரியம் செய்தாலும் செய்யா விட்டாலும் விநாயகனைப் பூசித்து வழிபடுவதை மறக்க மாட்டாள் பாட்டி; தமிழ்ப் பாட்டியாகிய ஔவையைத்தான் சொல் கிறேன். தமிழ் தளரா நாவும் அன்பு தளரா உள்ளமும் உடைய அந்தப் பெருமாட்டி,

> "பாலும் தெளிதேனும் பாகும் பருப்பும்இவை
> நாலும் கலந்துனக்கு நான்தருவேன்;—கோலஞ்செய்
> துங்கக் கரிமுகத்துத் தூமணியே, நீஎனக்குச்
> சங்கத் தமிழ்மூன்றும் தா"

என்று விநாயகப் பெருமானை வேண்டித் தமிழ்ப் புலமை பெற்றவள் அல்லவா?

இன்று சுந்தரமூர்த்தி நாயனார், இறைவன் ஆனையும் ஆணையும் அனுப்பத் திருக்கைலை போகிறார். அவரைத் தொடர்ந்து பரியின்மேல் பரிவுடன் சேரமான் பெருமாள் நாயனாரும் போகிறார். சேரனுடன் தமிழ்ச் சுவையை அளவளாவிப் பருகும் ஔவைக்கு இச் செய்தி தெரிந்தது. 'எத்தனை காலம் இந்த மண்ணுலகில் வாழ்வது! நாமும் கைலை செல்வோம்' என்ற எண்ணம் வந்தது.

மனத்தினை அடக்கமாட்டாமல் அதன் போக்கிலே செல்பவர்களுக்கு மரணம் வரும் காலம் இன்னதென்று தெரியாது. இறைவனிடம் பேரன்பு கொண்டு அவன் அருளால் மனத்தை வசப்படுத்தியவர்களுக்கு மரணம் வருங் காலம் முன்பே தெரியும். தவத்திலும் யோகத்திலும் முதிர்ந் தவர்களுக்கோ, தாம் வேண்டும் போது பூவுலக வாழ்வை நீத்து விடமுடியும்.

பழுத்த பழமாகிய ஔவை, நெடு வழிக்கு நல்ல துணை அமைந்திருக்கிறது என்று எண்ணிச் சேர மன்னருடன் கைலை செல்ல எண்ணினாள். விநாயக பூசை செய்யும் நேரம் அது. தான் நினைத்த காரியம் முட்டின்றி முடிய வேண்டுமென்று பூசையைப் புரியத் தொடங்கினாள். கைலை போகும் வேகம் உந்தியது; பூசையும் வேகமாக நடந்தது.

அப்போது ஒரு குரல் கேட்டது; "ஏன் இத்தனை விரைவு? அமைதியாகப் பூசை செய். உன் விருப்பம் நிறைவேறும்" என்று ஔவையின் காதில் விழுந்தது. சுற்றும் முற்றும் பார்த்தாள்; யாரும் இல்லை. விநாயகப் பெருமானே இவ்வாறு அருளினான் என்று உணர்ந்து, அமைதியாகவே பூசையைத் தொடர்ந்து செய்தாள்.

பூசை முறைப்படி நிறைவேறியது. பாட்டிக்குத் திருப்தி பிறக்கவில்லை. 'நம் விருப்பத்தை நிறைவேற்றும் பெருந் துணையாகக் கரிமுகக் கடவுள் இருப்பதை மறந்து அவசரப் பட்டோமே!' என்று உருகினாள். அப் பெருமானுடைய திருவருளால் தனக்கு வாழ்வில் கிடைத்த நலங்களையெல்லாம் எண்ணிப் பார்த்தாள். அருந்தமிழ்ப் புலமையும் பெரும் புகழ் நிலைமையும் அவன் வழங்கினான். குருவடிவாகி வந்து உவட்டா உபதேசம் புகட்டினான். தெவிட்டாத ஞானத் தெளிவைக் காட்டினான். ஐம்புலனை அடக்கும் உபாயத்தை அருளினான். கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்து, இருவினை தம்மை அறுத்து இருள் கடிந்தான். தவம் பலிக்கச் செய்தான். யோகம் நிறைவுற அருளினான். 'என்னை அறிவித்து எனக் கருள் செய்து, முன்னை வினையின் முதலைக் களைந்தான்.'

அவை மட்டுமா? வாக்கும் மனமும் இல்லா மனோலயம் தேக்கிய அவளுடைய சிந்தை தெளிவித்தான். அருள் தரும் ஆனந்தத்தில் அழுத்தினான். அல்லல் களைந்தே அருள் வழி காட்டினான். அஞ்சு அக்கரத்தின் அரும்பொருள் தன்னை

நெஞ்சில் நிறுத்தினன். இவ்வாறெல்லாம் தத்துவநிலையைத் தந்து ஆட்கொண்ட விநாயகப் பிரானை மறக்கலாமா? புலமை பெறுவது எளிது; அருள் இன்பம் பெறுவது அரிது. அதனை அருளிய பெருமானுடைய கருணையை எண்ணி எண்ணிக் கண்ணீர் ஆறுகப் பெருகப் புளகம் போர்ப்ப அமர்ந்திருந்தாள்.

இப்போது அவளுக்குக் கைலையின் நினைவு மறந்தது. சேரமானைப் பற்றிய சிந்தனை ஒழிந்தது. தன்னையே மறந்து விநாயகப் பெருமானுடைய திருவருள் இன்ப உணர்ச்சியிலே மிதந்தாள். அவள் உள்ளத்தில் அந்த இன்ப அலைகள் மோதின. அப்போது ஒரு பாட்டு எழுந்தது. கவித் திறமை படைத்தவர்கள் உள்ளம் உணர்ச்சி வசப்படும்போதெல்லாம் கவி பிறக்கும். நாம் துயரத்தில் ஆழும்போது புலம்பலும், மகிழ்ச்சியில் திளைக்கும்போது ஆ, ஊ என்ற ஆரவாரமும் எழுகிறதுபோல, கருவிலே திருவுடைய கவிஞர்களிடம் கவி எழும்.

அப்போது உதயமான கவிதையே விநாயகர் அகவல் என்ற அழகிய திருப்பாட்டு. எழுபத்திரண்டு அடிகளை உடைய அப்பாட்டில் ஔவைப் பாட்டி முதல் முதலில் விநாயகப் பெருமானுடைய திருவடியை எண்ணி, அதன் கண் பலவிசை பாடும் சிலம்பைத் தியானித்து, அவனுடைய திருவுருவம் முழுவதையும் சொல்லால் கோலம் செய்கிருள்.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்அரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்

நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே!*

இவ்வாறு தொடங்கி, தான் விநாயகன் அருளால் பெற்ற பேற்றையெல்லாம் சொல்லி, கடைசியில் அப்பெருமானைச் சரண் புகுகிருள் தமிழ்ப் பாட்டி.

தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக, விரைகழல் சரணே!

உலக வாழ்வை நீக்கும்போது இறைவனுடைய திருவடியே சரணமென்று புகுவது அறிஞர் இயல்பு. அந்த முறைப்படியே ஔவை பாடி நிறைவேற்றினுள். பாட்டு முடிந்தும் அவள் உள்ளக்கிளர்ச்சி நிற்கவில்லை. பாட்டின் கார்வை போல இன்பம் உள்ளத்தே தேங்கி நின்றது.

அப்போது விநாயகப் பெருமான் தன் துதிக்கையினுல் அப்பெருமாட்டியைத் தூக்கிக் கைலையிலே கொண்டு சேர்த்தான். ஔவை பாட்டால் துதிக்கை செய்து நிறைவேற்றின் அளவிலே, விநாயகன் துதிக்கை அவள் விருப்பத்தை நிறைவேற்றியது.

கண்ணை விழித்துப் பார்த்தாள் ஔவை. புதிய இடம்; புதிய தோற்றம்; எல்லாம் மாசு மறுவற்ற வெள்ளி மயம். இதுதான் திருக்கைலாயம் என்று அங்குள்ள சிவகணத்தினரில் ஒருவர் சொன்னர். பாட்டி வியப்பினுல் மலர்ந்த

---

களபம் - கலவைச் சந்தனம். துகில் ஆடை - மிக மெல்லிய ஆடை. வன்ன மருங்கில் - அழகிய இடையில். எறிப்ப - வீச. பேழை - பெட்டி. கோடு - தந்தம். சிந்துரம் - சிவப்புத் திலகம். நான்ற - தொங்கிய. சொற்பதம் - சொல்லின் நிலை. துரியம் - கருவி கரணம் கழன்ற நிலை.

கண்களுடன் பார்த்தாள். நாலு திசைகளையும் பார்த்தாள். என்ன சாந்தமான சூழ்நிலை! ஏதோ புதிய ஆனந்தம் தன்னைக் கரைத்துக் கொண்டது போன்ற உணர்ச்சி அல்லவா எழுகிறது?

சிறிது நின்று நிதானித்தாள். கணபதியின் கருணையால் சிறிதும் முயற்சி இல்லாமலே கைலை வந்ததை எண்ணி உருகி வழுத்தினாள். அப்போதுதான் சேரமான் பெருமாளின் நினைவு வந்தது. 'அவர்கள் முன்னே போயிருப்பார்களோ?' இந்த ஐயத்தை அருகில் நின்றவரிடம் கேட்டுத் தெரிந்து கொண்டாள்; அவர்கள் இன்னும் வந்து சேரவில்லை.

பாட்டி நின்றாள். சுந்தரர் வந்தார். அவர் சிவபெருமான் நினைவையன்றி வேறு ஒன்றும் இன்றி வந்தவர்; பாட்டியைக் கவனிக்கவில்லை. பின்னாலே சேரமான் பெருமாள் வந்தார். பாட்டி நிற்பதைக் கண்டு வியந்து. "எப்படி வந்தீர்கள்? காலால் நடந்தா?" என்று கேட்டார்; அருகில் வாகனம் ஒன்றும் இல்லையல்லவா?

"இல்லை; கையால்" என்றாள் பாட்டி.

"கையாலா? விளங்கவில்லையே!"

"விநாயகப் பெருமான் தம் துதிக்கையாலே என்னை இங்கே கொண்டு வந்து விட்டார். வாகனத்தில் வரும் உங்களுக்கு முன்னே நான் வந்து விட்டேன். எல்லாம் உமை மைந்தர் திருவருள் வலிமை" என்று சொல்லி ஒரு பாடலையும் கூறினாள்.

மதுர மொழிநல் உமையாள்
புதல்வன் மலர்ப்பதத்தை
முதிர நினையவல் லார்க்குஅரி
தோ? முகில் போல்முழங்கி
அதிர நடந்திடும் யானையும்
காதம்; அதன்பின்வரும்
குதிரையும் காதம்; கிழவியும்
காதம், குலமன்னனே!

தமிழ்ப் பாட்டியைத் திருக்கைலையில் ஏற்றக் காரணமாக இருந்த விநாயகர் அகவல் தமிழ் மக்களுக்குக் கிடைத்த பெரு வரமாக இன்றும் நின்று நிலவுகிறது. அதைப் பாராயணம் செய்து தம் விருப்பம் நிறைவேறப் பெறும் அன்பர்கள் பலர்.

# யானைக்கும் கலங்கார்

**யா**ழ்ப்பாணத்தில் நடைபெற்ற திருமுறை மகா நாட்டிலே கலந்து கொள்வதற்காகப் போயிருந்தேன். சில ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்த செய்தி இது. மகாநாட்டுக்கு இலங்கையின் கிழக்குப் பகுதியாகிய மட்டக் களப்பில் வாழும் தமிழர்களில் பலர் வந்திருந்தனர். திருக்கோணமலை என்ற சிவத்தலம் அந்தப் பகுதியில்தான் இருக்கிறது. அவர்கள் என்னை மட்டக்களப்புக்கு வந்து பேசவேண்டும் என்று அழைத்தார்கள்; ஒப்புக்கொண்டேன்.

மட்டக்களப்புக்குப் புறப்பட எண்ணிய அன்று அமாவாசை. யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த நீர்வேலி என்னும் இடத்தில் கந்தசுவாமி கோயில் ஒன்று உண்டு. அந்தக் கோயில் பூசகராகிய திரு இராசேந்திரக் குருக்கள் என்பவர் என்னிடம் பேரன்புடையார். அவர் வீட்டில் உணவு கொண்டு காரில் புறப்பட்டேன். என்னுடன் யாழ்ப் பாணத்துப் புலவராகிய திரு பொ. கிருஷ்ணப் பிள்ளை என்பவரும் மட்டக்களப்பு அன்பர்களும் வந்தார்கள். அன்பர் கிருஷ்ணப்பிள்ளை நன்றாகப் படித்தவர்; படித்தவர் களிடம் அன்பு கொண்டு அவர்கள் கூறுவதைக் கேட்டு இன்புறுபவர்.

கார் போகும்போது நாங்கள் இலக்கிய சம்பந்தமான பலவற்றைப் பேசிக்கொண்டே போனோம். பகல் பதினொரு மணிக்கு நீர்வேலியிலே புறப்பட்டவர்கள் மாலை ஏழுமணி யளவுக்குப் பொலன்னருவா என்ற இடத்தை அடைந்தோம். அதுவரைக்கும் இடையே பல ஊர்களும் நகரங்களும் இருந்தன. அதற்கப்பால் பல மைல்களுக்கு ஒரே காடு. இருமருங்கும் வானளாவிய மரங்கள் சுவர் வைத்தது போல

நெருங்கி அடர்ந்திருக்கும். அந்தச் செறிவினிடையே கார் போகும் சாலை ஒரே நேர் கோடாகச் செல்கிறது.

பொலன்னருவா வந்ததும் எங்கள் காரை ஓட்டி வந்தவர், "இரவு இங்கே தங்கி விடியற்காலையில் எழுந்து மட்டக் களப்புக்குப் போகலாமா?" என்று கேட்டார். என்னை அழைக்க வந்தவர்களுக்கு எப்படியாவது அன்று இரவே ஊர் போய்ச் சேர்ந்துவிட வேண்டுமென்று ஆசை. "அங்குள்ள வர்கள், இவர்கள் வருவார்களோ வரமாட்டார்களோ என்று ஐயமுற்று வழி பார்த்திருப்பார்கள். சிரமத்தைப் பாராமல் நேரே மட்டக்களப்புக்குப் போய்விட்டால் அங்கே இளைப் பாறிக் கொள்ளலாம்" என்றார்கள். "அப்படியே செய்ய லாமே!" என்று நான் சொன்னேன். பொலன்னருவாவில் சிற்றுண்டி அருந்தி விட்டு மறுபடியும் புறப்பட்டோம்.

தமிழ்ச் செய்யுட்களையும் அவற்றின் நயங்களையும் எடுத்துப் பேசி அளவளாவினோம். கார் காட்டைக் கிழித்துக் கொண்டு ஓடிக் கொண்டிருந்தது. மெல்ல மெல்லப் பேச்சு முருகனுடைய திருவருளைப்பற்றியதாக மாறியது. அப் போது நான் சில திருப்புகழ்ப் பாக்களைப் பாடினேன். பிறகு கந்தர் அலங்காரப் பாடல்களைச் சொல்லத் தொடங் கினேன். அதற்குமுன் பாட்டும் பொருளும் பேச்சுமாக விரவி வந்தது எங்கள் உரையாடல். அலங்காரப் பாடல்களைச் சொல்லத் தொடங்கியபோது அவை யாவும் நின்றன. நான் உணர்ச்சியோடு பாடல்களை ஒன்றன் பின் ஒன்றாகச் சொல்லிக் கொண்டே வந்தேன். உடன் இருந்தவர்கள் அவற்றைக் கேட்டுக்கொண்டே வந்தார்கள். அந்த இருளி டையே காட்டுச் செறிவினூடே கார் படுவேகமாகப் போய்க் கொண்டிருந்தது. நாங்கள் அலங்காரப் பாடல்களில் உள்ளத்தைச் சிக்கவிட்டு மற்ற ஒன்றிலும் சிந்தையைப் போக்காமல் அமர்ந்திருந்தோம்.

கார் வரவர வேகமாகப் போவது தெரிந்தது. அதைப் பற்றிச் சிந்திக்கவோ, பேசவோ, அப்போது தோன்றவில்லை.

முருகனுடைய நினைவிலே மிதந்தோம். இரவு பத்து மணிக்கு மட்டக்களப்பு வந்து சேர்ந்தோம். அலங்காரப் பாடல்களை இடையீடின்றிப் பாடி வந்தமையால் எனக்கு ஒரு விதமான இன்பக் கிளர்ச்சி உண்டாகியிருந்தது.

மட்டக்களப்பு அன்பர்கள் நான் தங்க வசதியான இடம் ஒன்றைத் திட்டம் செய்திருந்தார்கள். அங்கே இறங்கியவுடன் கை கால் கழுவிக்கொண்டு விபூதிப் பையை எடுத்துத் திருநீறு இட்டுக் கொண்டேன். சொல்லவொண்ணாத ஆனந்தம் உள்ளத்தே நிலவியது.

அப்போது, காரை ஓட்டி வந்தவர் என் அருகே வந்து நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கி எழுந்து, "திருநீறு வேண்டும்" என்று கையை நீட்டினார். "நான் என்ன தம்பிரானா? பண்டார சந்நிதியா? என்னை ஏன் வணங்குகிறீர்கள்?" என்று கேட்டேன், அவர், "உங்கள் கையால் திருநீறு தாருங்கள்; அப்புறம் சொல்கிறேன்" என்றார். நான் திருநீறு தந்துவிட்டு, "என்ன சொல்லப்போகிறீர்கள்?" என்று கேட்டேன்.

"இன்று உங்களால் நாம் எல்லோரும் பிழைத்தோம்" என்றார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை.

"நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?"

"ஆம்; முருகன் திருவருள்தான் நம்மைக் காப்பாற்றியது."

"நாம் ஓர் ஆபத்திலும் அகப்பட்டுக் கொள்ளவில்லையே! அப்படியிருக்க நீங்கள் ஏதோ பெரிய விபத்திலிருந்தும் தப்பியதுபோலப் பேசுகிறீர்களே!"

"இரண்டிடங்களில் ஆபத்து நெருங்கியது" என்று அவர் சொன்னவுடன் எல்லோருமே அவரை நோக்கி, "என்ன, என்ன?" என்று கேட்டார்கள்.

"இப்படி ஏதாவது வரும் என்று எண்ணியே நான் பொலன்னருவாவில் தங்கி வரலாம் என்று சொன்னேன்.

ஆனல் இவர்களுக்கு இருந்த ஆர்வத்தைக் கண்டு புறப்பட்டு விட்டேன்."

"என்ன ஆபத்து வந்தது?" என்று யாவரும் சேர்ந்து கேட்டோம்.

"இந்தக் காடுகளில் யானைகள் மிகுதி என்பது உங்களுக்குத் தெரிந்திருக்கும். அவை இரவிலே சஞ்சாரம் பண்ணும்; ஒரு காட்டிலிருந்து மற்றொரு காட்டுக்குப் போகும். அப்போது அருகில் காரில் யாராவது வந்தால் காரைக் காலாலே தள்ளி நசுக்கிவிடும். அதனல் பெரும்பாலும் இராக் காலங்களில் இந்தச் சாலை வழியே நாங்கள் காரில் போவதில்லை. அப்படிப் போக நேர்ந்தாலும் யானைகள் நடமாடுவது தெரிந்தால் அவை சாலையைக் கடக்கு மட்டும் நெடுந்தூரத்திலேயே காரை நிறுத்தி விளக்கை அவித்து விட்டு வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டு காத்திருப் போம். யானைகள் போய்விட்டன என்று தெளிவாகத் தெரிந்த பிறகே காரை நகர்த்துவோம்."

ஏதோ துப்பறியும் கதையைக் கேட்பதுபோல நான் அவர் வாயையே பார்த்துக் கொண்டிருந்தேன்.

"நான் காரை நாற்பது மைல், ஐம்பது மைல் வேகத்தில் ஓட்டினேன். பிறகு அறுபது, எழுபது, எண்பது என்று முடுக்கினேன். நீங்கள் அதைக் கவனிக்கவில்லையோ?" என்ருர்.

"நாங்கள் கந்தர் அலங்காரத்தில் மூழ்கியிருந்தோம்" என்று புலவர் கிருஷ்ணப் பிள்ளை சொன்னர்.

"நாங்கள் கவனித்தோம்; விரைவில் ஊருக்குப் போவ தற்காக வேகமாக ஓட்டுகிறீர்கள் என்று எண்ணினோம்" என்ருர்கள் சில அன்பர்கள்.

"இரண்டிடங்களில் யானை வந்தது."

"என்ன! யானையா? நான் பார்க்கவில்லையே!" என்றேன்.

"நாம் பார்க்கும்படி வந்திருந்தால் கார் தப்பியிருக்குமா? அருகில் ஐந்தடி தூரத்தில் காட்டுக்குள் கிளையை ஒடித்துக் கொண்டிருந்தது ஒரு யானை. அது காரின் ஒலியைக் கேட்டுச் சாலைக்கு வந்திருந்தால் ஆபத்து நேர்ந்திருக்கும். அந்த ஓசையைக் கேட்டபோது எனக்குச் சிறிது நடுக்கம் உண்டா யிற்று. பிறகு தைரியம் பெற்று மிக்க வேகமாகக் காரை ஓட்டலானேன்."

"ஆகவே, உங்கள் சாமர்த்தியத்தால் நாங்கள் தப்பினோம் என்று சொல்லுங்கள்" என்றேன் நான்.

"இல்லை, இல்லை; அதைத்தானே சொல்ல வருகிறேன்! யானை மரத்தை ஒடிக்கும் ஓசையைக் கேட்டவுடன் எனக்கு அச்சம் உண்டாயிற்று; கை நடுக்கமெடுத்தது. அப்போது நீங்கள் முருகனைப் பாடிக்கொண்டிருந்தீர்கள். பாட்டை நானும் கேட்டுக்கொண்டுதான் வந்தேன். அச்சம் உண்டான போது, நீங்கள் உருக்கமாகப் பாடினீர்கள். அதைக் கேட்டு முருகன் காப்பாற்றுவான் என்ற உறுதி உண்டாயிற்று; காரை வேகமாக ஓட்டினேன். ஆனால் சிறிது நேரங்கழித்துப் பின்னும் பெரிய ஆபத்து வந்தது."

கேட்டுக்கொண்டிருந்த எங்கள் ஆவல் மிகுந்தது.

"இந்த முறை ஆணும் பெண்ணுமாக யானைகள் வந் தன. அதை வாசனையிலிருந்து கண்டு கொள்ளலாம். அவை சேர்ந்திருக்கும்போது சிறிய தடை உண்டானாலும் சும்மா விடுவதில்லை. சாலைக்கு மிகவும் அருகில் அவை இருந்ததை நான் உணர்ந்தேன். அப்போது என் கை மிகுதி யாக நடுங்கியது. இப்போது தப்புவது அரிதென்றே எண்ணிவிட்டேன். அப்போது......"

"ஒன்றுமே எங்களுக்குத் தெரியாதே!" என்று அன்பர் ஒருவர் கூறினார்.

"தெரிந்து என்ன செய்ய முடியும்? வீண் கலவரந்தான் உண்டாகும். தெரியாமல் இருந்ததே நல்லது. எனக்கு

அப்போது இருந்த நிலையை இப்போது எடுத்துச் சொல்ல முடியாது. அப்போது நீங்கள் சற்றே உரத்த குரலில் பாடினீர்கள். முருகன் திருநாமம் பாட்டில் வந்தது. அது காதில் விழவிழ மறுபடியும் எனக்குத் துணிவு பிறந்தது. காரின் வேகத்தை அதிகமாக்கினேன். அத்தனை வேகத்தில் நான் ஓட்டுவதே இல்லை. ஆபத்திலிருந்து தப்பிவிட்டோம். அதற்குக் காரணம் உங்கள் பாட்டு. என் மனத் தளர்ச்சியை யும் உடல் தளர்ச்சியையும் அந்தப் பாட்டுப் போக்கியது" என்று கூறி முடித்தார் காரோட்டி.

உடன் இருந்த அன்பர் ஒருவர், "எதிரே வந்த கார்க்கார ரிடம் எலியா என்று ஏதோ சொன்னீர்களே!" என்று கேட்டார்.

"ஆமாம்; அதைக் கவனித்தீர்களா? காட்டின் கடைசிப் பகுதி வந்தபோது எதிரே ஒரு கார் வந்தது. அது காட்டின் வழியே போவது. அதை ஓட்டியவனிடம் யானை இருக்கிறது என்று எச்சரித்தேன். 'எலியா' என்பது சிங்கள மொழியில் யானையைக் குறிக்கும் சொல்" என்று அவர் விளக்கினார்.

நான் முருகன் திருவருளை நினைந்து உருகினேன்; அதற்கு மேலாக அருணகிரிநாதப் பெருமானுடைய அருள் வாக்கை எண்ணி விம்மிதம் அடைந்தேன். கார் ஓட்டியிடம் பேசலா னேன்: "முருகன் அருளால் நாம் ஆபத்திலிருந்து நீங்கினோம் என்று நீங்கள் சொன்னதுதான் உண்மை. அருணகிரி நாதர் திருவாக்கின் பெருமையை இன்று நான் உணர்ந்து கொண்டேன். ஒரு பாட்டின் உண்மைப் பொருளை இன்று தெளிவாகத் தெரிந்து கொண்டேன்."

புலவர் கிருஷ்ணப்பிள்ளை, "என்ன பாட்டு?" என்று ஆவலோடு கேட்டார்.

"கந்தர் அலங்காரத்தைப் பாராயணம் செய்தால் இன்ன பயன் கிடைக்கும் என்று ஒரு பாடல் பாடியிருக்கிறார். அலங்காரத்தில் ஒரு பாட்டைச் சொன்னாலும் வேந்தரால்

பயம் உண்டாகாதாம்; யமனுக்கும் பயப்பட வேண்டாம்; கரடி, புலி, யானைகளுக்கும் பயப்பட வேண்டாம் என்று பாடுகிறார் அருணகிரியார்.

சலங்காணும் வேந்தர் தமக்கும்அஞ்
சார்;யமன் சண்டைக்கஞ்சார்;
துலங்கா நரகக் குழிஅணு
கார்;துட்ட நோய்அணுகார்
கலங்கார் புலிக்கும் கரடிக்கும்
யானைக்கும்; கந்தன் நன்னூல்
அலங்காரம் நூற்றுள் ஒருகவி
தான்கற்று அறிந்தவரே

என்பது அந்தப் பாட்டு. கலங்கார் யானைக்கும் என்பதை இப்போது நன்றாகத் தெளிந்தேன். இதை எந்நாளும் மறவேன்'' என்று சொல்லும்போது எனக்கு மேலே பேச வாய் வரவில்லை.

அதுமுதல் கந்தர் அலங்காரம் சொல்லி இந்தப் பயனைத் சொல்லும் போதெல்லாம் என் கண்முன் இலங்கைக் காடும் அதனிடையே காரை ஓட்டிய சாரதியின் தோற்றமும் நிற்கின்றன. அருணகிரியார் வாக்கு உண்மை வாக்கு என்பதில் சிறிதும் ஐயத்துக்கு இடமின்றி, முருகன் திருவருள் தெளியவைத்ததை எண்ணி உருகுகிறேன்.

# அருணகிரியாரின் திருவுள்ளம்

கடவுள் ஒருவராலுைம் அவரைப் பல உருவங்களில் வழிபடும் வழக்குப் பாரத நாட்டில் இருந்து வருகிறது. சைவம், வைணவம் என்ற இரண்டு பெரிய ஆறுகள் சங்கமம் ஆகின்ற பெரும் கடல் இந்து சமயம். இவற்றின் கிளைகள் பல சமயங்களாக உருவெடுத்திருக்கின்றன. சிவ பெருமானை வழிபடுவோர் எல்லோரும் ஒரே கருத்தைக் கொண்டவர்கள் என்று சொல்ல இயலாது. சமயத்திற்குத் தலைவராக ஒரே கடவுளை வழிபட்டாலும், இறைவன், உலகம், உயிர் ஆகிய வற்றின் தொடர்புகள், முத்தியின் இயல்பு என்ற கருத்துக் களில் பல வேறுபாடுகள் இருக்கும். துவைதம், அத்வைதம், விசிஷ்டாத்வைதம், வீர சைவம் முதலிய வேறுபாடுகள் வழி படும் மூர்த்திகளின் வேறுபாட்டால் அமைந்தவை அல்ல. உயிர், உலகம், கடவுள், முத்தி ஆகியவற்றைப் பற்றிய கருத்து வேறுபாட்டால் அமைந்தவை. வழிபாட்டு முறையில் எந்த வகையைப் பின்பற்றுபவர்களாக இருந்தாலும் பலருக்கு வழிபடுகின்ற கடவுள் சிவபெருமானாக இருப்பர். வேறு பலருக்குத் திருமாலாக இருப்பர்.

சிவபெருமானைத் தொழுகின்ற கூட்டத்திற்குச் சிவ பிரானையன்றி அம்பிகை, முருகன், விநாயகர், வீரபத்திரர், பைரவர் முதலிய பல வழிபடும் மூர்த்திகள் உண்டு. அம்பிகையின் மூர்த்தங்கள் பல. முருகப் பெருமானின் கோலங்களும் பல பல. விநாயகப் பெருமானும் வெவ்வேறு சந்தர்ப்பங்களில் ஏற்றுக்கொண்ட கோலங்கள் பல உண்டு. இப்படியே திருமாலின் திரு அவதாரங்கள் பல. அந்த அந்த அவதாரத்திலும் வெவ்வேறு கோலங்கள் பக்தர்களின் வழி பாட்டுக்கு உரியனவாக இருக்கின்றன.

இருந்து வருகின்றன என்று திருமுருகாற்றுப்படையினல் நாம் அறிகிறோம். பரிபாடல் என்ற நூலில் மதுரை மாநகரத்தில் வாழ்ந்த மக்கள் திருப்பரங் குன்றத்தில் எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானிடத்தில் பேரன்பு வைத்து வழிபட்டுத் தத்தமக்கு வேண்டிய நலங்களைப் பெற்றூர்கள் என்று தெரியவருகிறது.

பிற்காலத்திலும் முருகப்பெருமானை வழிபட்ட அடியார்கள் பலர் இந்த நாட்டில் வாழ்ந்திருக்கிறூர்கள். அவர்கள் பாடிய பாடல்கள் பல. அவர்களுள் முருகப்பெருமானின் திருவருளில் ஈடுபட்டு மிகமிக விரிவாகத் திருப்புகழ் என்ற பெரிய பாக்கடலை வழங்கியவர் அருணகிரிநாதர். அவருடைய திருவாக்கினல் முருகப் பெருமானின் வீரச் செயல்களும், புகழும், அருளும், சிறப்பும் விளங்குகின்றன. அவை அல்லாமல் நம்முடைய பழைய பண்பாட்டின் வகைகள், பல துறைகளாக விரிந்த சமய நுட்பங்கள் ஆகியவையும் அவர் வாக்கில் விளங்குகின்றன. அருணகிரிநாதர் பெரிய தமிழ்ப் புலவர்; முருகன் அடியார்; ஞானி; யோகி; பக்தியைச் சிறப்பாகப் பாராட்டினவர்; எல்லாவற்றுக்கும் மேலாகப் பெரிய சமரசவாதி.

அருணகிரிநாதர் பாடிய திருப்புகழ் மிக விரிந்தது. அவர் பதினூறாயிரம் திருப்புகழ் பாடினூர் என்று மார்க்க சகாயதேவர் சொல்கிறூர். அவை முழுவதும் இப்பொழுது கிடைக்கவில்லை. ஆயிரத்து முந்நூற்றுச் சொச்சம் பாடல்களே கிடைத்திருக்கின்றன. கிடைத்தவற்றைப் பார்த்தாலேயே அருணகிரிநாத சுவாமிகளின் சமரச மனூபாவம், விரிந்த உள்ளப்பாங்கு, நன்கு தெரியும். அவர் தொடாத கதை இல்லை. பாடாத பொருள் இல்லை. சொல்லாத நெறி இல்லை.

ஞான நெறியைப்பற்றிச் சில பாடல்களில் விரிவாகச் சொல்வார். யோகத்தின் முறைகளைச் சில பாடல்களில் சிறப்பாகப் பாடுவார். பக்தியின் பெருமையைப் பல பாட்டுக்களில்

விரித்து உரைப்பார். முருகப் பெருமானின் அழகை அகக் கண் கொண்டு பார்த்த அநுபவத்தை இனிமையாக எடுத்துச் சொல்வார். அவன் தத்துவத்தைச் சொல்வார். வீரப் பிரதாப விளையாடல்களைப் பல பல பாட்டுக்களில் எடுத்து விரிப்பார். அவன் கருணையின் பெருமையை, வள்ளி அம்மையின் இயல்பை, வள்ளியெம் பெருமாட்டி தினைப்புனம் காத்த மலைச்சாரலுக்கு ஓடிவந்து அவள்பால் முருகன் கொண்ட காதலின் சிறப்பை அருணகிரிநாத சுவாமிகள் சொல்வது போல யாராலும் சொல்ல முடியாது.

இவை மாத்திரமா? சிவபெருமானின் கருணைச் செயல் கள் எல்லாம் அங்கே வரும். அப்பெருமானைப்பற்றிய நாமங்கள் எல்லாம் அருச்சனையாக விரிந்திருக்கும். திருமாலின் கருணையும், அவதாரக் கதைகளும், இராமபிரான் வரலாற்றின் பகுதிகளும், கண்ணபிரானின் கோலாகல விளையாடல்களும் அவர் பாடல்களில் ஆங்காங்கே காட்சி தரும். அம்பிகை, விநாயகப்பெருமான், திருஞான சம்பந்தர் முதலியோரின் பெருமைகளையும் திருப்புகழில் காணலாம்.

உலகத்தில் மக்கள் பிறந்து பலவகையான துன்பங்களை அடைந்து வாட்டமுறுவதைப் பல பல காட்சிகளாகச் சித்திரித்திருக்கிறார். மனிதன் அடைகின்ற துன்பங்களுக் கெல்லாம் மூலமான துன்பம் பிறப்பு என்பது. அந்தப் பிறப்புக்கு மூல காரணமாக இருக்கும் தீய குணங்கள் பல. ஆனாலும் பெரும்பான்மையான மக்கள் காமம் என்ற நோய் வாய்ப்பட்டே துன்புறுகின்றனர். அதனால் அருணகிரிநாத சுவாமிகள் உலகியலைப் பற்றிப் பாடுகின்ற பாடல்களில் காமத்தைப் பற்றிய பேச்சு மிகுதியாக இருக்கும். மங்கையர் மையலில் உழன்று படும் துன்பங்கள் மிக விரிவாகக் காணப் படும். அவற்றைக் கண்டு, அருணகிரியார் அத்தகைய அநுபவத்தைப் பெற்றுப் பின்பு அறிவு தெளிந்து, இறைவ னிடத்தில் ஈடுபட்டார் என்று சில ஆராய்ச்சிக்காரர்கள்

சொல்வார்கள். அப்படிச் சொல்வது முறையாகத் தோன்ற வில்லை. அருணகிரியார் தம் பாடல்களில் சொல்லியிருக் கின்ற அத்தனை தீய அநுபவங்களையும் தொகுத்துப் பார்த் தால், ஒரு மனிதன் தன் வாழ்நாளில் அநுபவிக்கக் கூடிய அநுபவங்களாகத் தோன்ற. அவர் வரிசை வரிசையாகச் சொல்கின்ற அத்தனை தீய அநுபவங்களையும் பல பல பிறவிகள் எடுத்தால்தான் அநுபவிக்க முடியும்,

அப்படியானல் அருணகிரியார் எதற்காக அவற்றை எடுத்துச் சொன்னர் என்ற கேள்வி எழலாம். உலகத்தில் மக்கள் படுகின்ற துன்பத்தைக் கண்டு, அவர்கள் வாயில்லாப் பூச்சிகளாக இருக்கிருர்களே என்று இரங்கி, அவர்கள் எம் பெருமானிடத்தில் விண்ணப்பம் செய்வதற்காகப் பல விண்ணப்பப் பிரதிகளாக அவற்றைக் கொடுத்திருக்கிருர். உலகத்தை எல்லாம் தாமாகப் பார்க்கிற உயர்ந்த அநுபவ நிலையில் வாழ்ந்த ஞானி அவர். தன் குழந்தையின் நோய்க்காக மருந்து உண்ணும் தாய் போன்ற கருணை உள்ளம் படைத்தவராதலின் உலகத்தாரின் துன்பங்களைத் தாம் ஏற்றுக்கொண்டு அவர்களுக்காகப் பாடிய பாடல்கள் அவை என்றே கொள்ளவேண்டும். இப்பொழுது உலகத்தில் உள்ள பெரும்பான்மையான மக்களைத் தாக்கி வாட்டி வதைத்து உருக்குலைக்கும் நோய் காமம் என்ற பெருநோய். ஆதலினல் அந்நோயைப் பற்றிய வருணனைகள் அவர் பாட்டில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

பொதுவாக, சைவசித்தாந்தம், அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம் என்ற சமய வேறுபாடுகள் இருந்தாலும் ஒவ்வொரு சமயத்திலும் உள்ள பெரியார்கள் ஒவ்வொரு நெறியை விரித்து உரைத்திருக்கிருர்கள். ஞானசம்பந்தப் பெருமான் முதலிய நாயன்மார்கள் எல்லோரும் சிவனடியார் கள். ஆனலும் ஒவ்வொருவருடைய முறையும் வெவ்வேறு வகை. ஞானசம்பந்தப் பெருமான் சத்புத்திர மார்க்கத்தில் இறைவனை அடைந்தார் என்றும், அப்பர் சுவாமிகள் தாச

மார்க்கத்தில் இறைவன் அருளைப் பெற்றார் என்றும், சுந்தர மூர்த்தி சுவாமிகள் சகமார்க்கத்திலும், மாணிக்கவாசகர் சன்மார்க்க நெறியிலும் சென்று இறைவன் அருளைப் பெற்றார்கள் என்றும் கூறுவார்கள். இவ்வாறே ஒவ்வொரு பெரியாரின் வாழ்க்கை முறையையும் ஆராய்ந்து பார்த்தோமாயின், அவர்கள் எல்லோருக்கும் அடிப்படையாக அமைந்துள்ள சமயக் கொள்கைகள் இருந்தாலும் அவரவர்களுக்குச் சொந்த அநுபவமாக அமைந்த சிறப்பான கொள்கைகளையும் பார்க்கலாம். இதைத்தான் மேல் நாட்டார் அவர்களுடைய தத்துவ முறை (Philosophy) என்று கூறுவர்.

அருணகிரிநாதப் பெருமானின் திருவாக்கை எல்லாம் ஆராய்ந்து பார்த்தால் அவருடைய திருவுள்ளத்தின் இயல்பு என்ன என்பது புலன் ஆகும். முருகன் அடியார் அவர் என்பதில் சிறிதும் சந்தேகம் இல்லை. ஆனால் தம் தம் கடவுளை உயர்த்திப் பாடுகின்ற மற்ற அடியார்கள் ஏதேனும் ஓர் இடத்தில் தங்கள் உபாசனாமூர்த்தி அல்லாத கடவுளைப் புறக்கணிக்கின்ற முறையில் பாடியிருக்கக் கூடும். அருணகிரிநாதர் அத்தகையவர்களைச் சேர்ந்தவர் அல்லர். தம்முடைய பேரன்புக்குரிய முருகனைப் போற்றிப் பாடுவதோடு மற்றத் தெய்வங்களையும் உயர்த்திப் பாடி, அந்தத் தெய்வங்களுக்கு முருகன் இன்ன உறவு என்பதைச் சொல்வதன் மூலம் முருகனின் சிறப்பைப் பின்னும் உயர்த்திய பெரியார் அவர். சிவபெருமானுடைய புகழாகவே சொல்லிக் கடைசியில் முருகனை அப் பெருமானின் மகனே என்று விளிப்பார். திருமாலின் சிறப்பாகவே பாட்டு முழுவதும் சொல்லிக் கொண்டு வந்துவிட்டுக் கடைசியில் அவர் மருகோனே என்று முருகனை உணர்த்துவார். இதுதான் அவரது சமரச நெறியும், முறுகிய பக்தியும் இணைந்து உருவெடுக்கும் முறை.

யோக நெறிகளைப் பற்றியும், ஞானவிசாரத்தைப் பற்றியும், பக்திப் பண்பாட்டைப் பற்றியும், கர்மயோகச் சிறப்

யைப் பற்றியும் பலபல பாடல்களில் அவர் தம் கருத்தை வெளியிட்டிருக்கிறார். அப்படியானால் அவர் ஞானியா, யோகியா, பக்தரா என்ற ஐயம் நமக்கு எழும். அவரது தத்துவ நெறி எது என்ற பெரிய கேள்வி நம் முன்னால் நிற்கிறது.

பெரும்பாலும் உலகத்தினர் அருணகிரிநாதர் கடைப் பிடித்த வழி "பக்தி" என்று சொல்வர். பல தலங்களுக்குச் சென்று, ஆங்காங்கு எழுந்தருளியிருக்கும் முருகப் பெருமானை வழிபட்டுத் திருப்புகழ் என்ற அற்புதமான நூலை அவர் நமக்கு ஆக்கித் தந்திருக்கிறார். இந்த நெறி பக்தி நெறி என்று பொதுவாக நாமும் ஒப்புக் கொள்வோம். அருண கிரியார் தலைமையான பக்தர். ஆயினும் அவருக்கு ஞானம் தெரியும்; யோகம் தெரியும்; சரியா கிரியா மார்க்கங்கள் எல்லாம் நன்றாகத் தெரிந்தவர் அவர்.

அவரது பக்தி, ஞானத்திற்குப் புறம்பானது அன்று; யோகத்திற்குப் புறம்பானதும் அன்று. அது பெரிய மரமாக வளர்ந்து, தனக்குள் மற்ற எல்லா நெறிகளையும் கிளைகளாகக் கொண்டது. பக்தி யோகம் என்று ஒன்றைச் சொல்வார்கள். ஞானம் என்ற முடிவை அடைவதற்குப் பக்தி வழியாக இருப்பதாக வேதாந்த நூல்கள் பேசுகின்றன. அருணகிரியார் திருவுள்ளத்தில் கிளர்ந்து எழுந்த பக்தி அத்தகையது அன்று. பக்தி வழியாக இருக்க, அதற்கு முடிவாகிய ஒன்று தலைப்பட்டதும் அந்த வழி நழுவி விடும். அத்தகையது அன்று இது. ஞானம் இல்லாமல் முத்தி கிடைக்காது என்று வேதாந்திகள் சொல்வார்கள். அந்த ஞானம் பக்தி இல்லாவிட்டால் விளையாது. பக்தியாகிய கனிவும், கர்மம் என்ற சாறும் கலந்தால்தான் ஞானக்கனி கிடைக்கும். பச்சை நிறமுள்ள காய் கனிவு கண்டவுடன் மஞ்சள் நிறமாகி, உள்ளேயுள்ள புளிப்புச் சுவையுள்ள சாறு இனிமையை அடைவதுபோல, பக்திக் கனிவினால் ஞானம் பழுத்து, கர்மம் என்ற சாறு சுவையுள்ளதாக மாறும்.

அப்போது கனிந்த கனியே இன்ப அநுபவம். பக்தி யோகம், ஞான யோகம், கர்ம யோகம் என்று சொல்லும் வழிகள் பெரியோர்களால் அநுசரிக்கப்பெற்று வருகின்றன. அருணகிரிநாதப் பெருமான் பக்தியோகியா? இல்லை. அதைப் பக்தி நெறி என்று சொல்லலாம். பக்தி நெறி என்பது யாது?

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனைஆண்ட
அத்தன்நமக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே!"

என்று மாணிக்கவாசகர் பேசுகின்றார். மாணிக்கவாசகப் பெருமான் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகளில், ஞானத்தின் உச்சியில் நின்றவர் என்று சைவ சித்தாந்திகள் சொல்வார்கள். ஞானப் பிழம்பாகிய மாணிக்க வாசக சுவாமிகள் இறைவன் தமக்குப் பக்தி நெறியை அறிவித்தான் என்று சொல்லுகிறார். அவரும் பக்தர்தாம். அவர் பக்தி வேறு; பக்தியோகம் வேறு. மாணிக்கவாசகர் உலகியலில் ஈடுபட்டு அமைச்சராகப் பணியாற்றிவந்தவர். அவரை எம்பெருமான் தடுத்தாட்கொண்டார். மனம் உருகி இறைவன் இன்ப அநுபவத்தைப் படிப்படியாகச் சுவைத்தார். ஒரே அடியாக ஒன்றை விழுங்குவதைக் காட்டிலும் சிறிது சிறிதாக நுகர்ந்தால் சுவையும் நீளும். அப்படி எம்பெரு மானின் திருவருள் அநுபவ இன்பத்தை மெல்ல மெல்ல உண்டவர். அதனால் மற்றவர்கள் அநுபவிக்கின்ற அநு பவத்தைக் காட்டிலும் மாணிக்கவாசருக்கு அநுபவம் நீண்ட தாகவும், உயர்ந்ததாகவும், சிறந்ததாகவும் அமைந்தது.

ஒரு வகையில் அருணகிரிநாத சுவாமிகளின் திரு வுள்ளத்தை மாணிக்கவாசகர் திருவுள்ளமாகச் சொல்லலாம். ஆனால் மாணிக்கவாசகர் அருணகிரிநாத சுவாமிகளைப் போல உலகியலை மிக மிக விரிவாகக் கண்டார் இல்லை. அவர்

அமைச்சராக இருந்ததோடு சரி. அருணகிரிநாத சுவாமி களோ பல வகையான மக்களின் இயல்பைப் பார்த்து, இரங்கி மனம் உருகினவர். அவருக்கு முருகப் பெருமான் கருணை நிரம்பிய கடவுளாகத் தோற்றினன். தடுத்து ஆட் கொள்ளும் திறன் கருணை மிகுதியைக் காட்டுகிறது. பக்குவம் உடைய ஆன்மாக்கள் நல்லின்பம் அடையும்படி அருள் செய்வது இயற்கையான வழி. அப்படி இல்லாமல் தன்னை மறந்த நிலையில் செல்கின்ற ஆன்மாக்களுக்குப் பக்தியைக் கொடுத்து அவர்களைத் தடுத்து இறைவன் ஆட் கொள்கிறன். சுந்தரமூர்த்தி சுவாமிகளை அப்படி ஆட் கொண்டான். அப்பர் சுவாமிகளையும் அவ்வாறே ஆட் கொண்டான். இப்படித் தடுத்தாட்கொள்ளும் பெருமை முருகப் பெருமானிடத்திலும் சிறந்து நிற்கிறது. அது வள்ளியம் பெருமாட்டியின் வரலாற்றில் தெரிகிறது. மற்ற அடியார்களை இறைவன் தடுத்து ஆட்கொண்ட வரலாறு களைச் சைவ வைணவ புராணங்கள் சொல்கின்றன. வள்ளியம்மையைத் தடுத்து ஆட்கொள்ள முருகன் சென்றது மிக மிகச் சிறந்த பண்பு. சன்மார்க்கத்தில் வருகின்ற பேரின்பத்தை வள்ளியம்மை பெற்றுள். அதை அருண கிரியார் 'வள்ளி சன்மார்க்கம்' என்று வள்ளிமலைத் திருப் புகழில் பேசுகின்றூர். முருகப் பெருமான் வள்ளியைத் தடுத்து ஆட்கொண்டான் என்பதை அவர் பல இடங்களில் குறிப்பாகவும், வெளிப்படையாகவும் தெரிவித்திருக்கிறூர்.

உலகியற் பாசத்தில் கட்டுப்பட்டு, பிரபஞ்சச் சேற்றில் உழலும் மனிதன் முருகனிடத்தில் உண்மையான அன்பு பூண்டு, நெஞ்சம் நெகிழ்ந்தால், மனம் உருகினல், அவன் கருணை செய்ய வருவான் என்ற பெரிய நம்பிக்கையை உண்டாக்குவது அருணகிரியாரின் இயல்பு. யோகம் செய்து முயற்சி பண்ணி, மூலாதாரத்து அக்கினியை மேல் எழுப்பி, ஆதாரங்களை எல்லாம் கடந்து சென்று, சகஸ்ரார சக்கரத்தை அடைந்து, அங்கே பொழியும் அமுதத்தைப் பருகலாம்

எனச் சொல்லுகின்ற யோக முறைகளை அருணகிரியார் தெரிந்து கொண்டிருந்தார். அவர்க்களை அறுத்து, இந்திரிய நிக்கிரகம் செய்து, உணவை ஒடுக்கி, விரதங்களைக் கடைப் பிடித்து, ஞான நெறியில் நிற்பது அவருக்குத் தெரியும். ஆனால் அவை அத்தனையும் எல்லோருக்கும் கை வந்த நெறிகள் அல்ல. உலகிலுள்ள பல்லாயிரக்கணக்கான மக்களில் சிலருக்கே யோகம் செய்ய முடியும். பல லட்சக் கணக்கான மக்களுக்குள்ளே யாரேனும் ஒருவர் இந்திரிய நிக்கிரகம் செய்து ஞானத்தை அடையலாம். ஆனால் முருகப் பெருமானின் திரு அவதாரம், மேல் சபைக்குப் பிரதிநிதி பொறுக்குகின்ற தேர்தல் அல்ல. உலகில் வாழ்கின்ற பெரும்பாலான மக்களுக்கு அருளைப் பரப்பவேண்டுமென்று கருதியே முருகன் அவதாரம் செய்தான். ஆதலால் பெரும் பாலான மக்களுக்குப் பயன்படுகிற நெறி எதுவோ அந்த நெறியில் உண்மையான நம்பிக்கையையும், பற்றையும் உண்டாக்க வேண்டுமென்பது அருணகிரியாரின் திருவுள்ளம். முருகப்பெருமானை மிக மிக எளியவனாக அவர் காட்டுகிறார். எத்தகைய வாழ்க்கையை உலகத்தில் அநுபவித்துக் கொண் டிருப்பவனாக இருந்தாலும் முருகனிடத்தில் பக்தி கொண்டு நெஞ்சு நெகிழுமானால் அந்த நெகிழ்ச்சி அவனைப் படிப்படி யாக ஏற்றி நிரதிசய ஆனந்தத்தைப் பெறச் செய்யும் என் பது அவர் திருவுள்ளத்தில்கொண்ட நெறி; தம் பாடல்களில் எடுத்துக் காட்டும் சிறப்பான நெறியும் அதுவே.

பக்தி என்பது ஒரு படி. அதற்கு அப்பாலே இந்திரிய நிக்கிரகம் என்பது ஒரு படி. அதற்கும் பிறகு சமநிலை என்பது ஒரு படி. அதற்கு அப்பால் அருள் பதிதல் என்பது ஒரு படி. பின்பு இன்பத்தைப் பெறுதல் என்பது கடைசிப் படி என்று விளக்கிக் காட்டுகின்ற நூல்கள் பல இருக் கின்றன. அருணகிரிநாதப் பெருமான் சொல்வது என்ன? முருகப் பெருமானின் நினைப்பைக் கொள்வது அன்பின் முதல் படி. அந்த நினைவு தோற்றிய பிறகு நெகிழ்ச்சி பெறுவது

அன்பின் இரண்டாவது நிலை. நெகிழ்ச்சி பெற்ற பிறகு உலகத்திலுள்ள ஆசை அத்தனையும் நழுவுவது அடுத்த நிலை. நழுவின பிறகு எம்பெருமான் திருவருள் படிவது தொடர்ந்து வரும் அநுபவம். அதன் பயனாகப் பேரின்பம் பெறும் நிலை - அன்பு பழுக்கும் நிலை - வரும். முதலில் தோற்றிய அன்பே வெவ்வேறு பக்குவத்தில் தழைத்து வளர்ந்து முதிர்ந்த நிலையில் பேரின்ப அநுபவமாகிறது. இது அருணகிரி நாதருக்கே அமைந்த நெறி அன்று. திருமூலர் இதைச் சொல்கிறார்.

> "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
> அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
> அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே"

என்பது திருமந்திரம். அன்பு என்பது வழி, சிவம் என்பது அவ்வழியினுடைய முடிவில் உள்ள லட்சியம் என்று சொல்வது பிழை. அன்பு என்ற ஒரு நிலையே சிவமாக மாறு கிறதென்ற கருத்து, திருமூலர் வாக்கிலிருந்து புலப்படு கிறது.

முதலில் எம்பெருமானின் நினைவு உள்ளத்தில் தோற்றினால் அது குறுகிய வழியாக முதலில் தோன்றி, வர வர அதுவே விரிந்து பெரிய வழியாக வளர்கிறது. பெரிய மலையில் சிறிய சிறிய ஊற்றுக்கால்களாகத் தோன்றிய நீர் மிகக் குறுகிய அளவோடு புறப்படுகிறது. அந்த மலையில் ஊற்றெடுத்து இழிந்து வந்த நீர் மெல்ல மெல்ல ஒன்று கூடி ஒரு கால்வாய் ஆகிப் பின்பு வேகம் பெற்று அருவி ஆகிறது. அந்த அருவி கடகடவென்று நிலப்பரப்புக்கு வந்த பிறகு தொடர்ந்து படர்ந்து விரிந்து செல்கிறது. விரிந்த கால்வாய் ஆறாகப் பெருகிப் பல வயல்களைக் கொழிக்கச் செய்கிறது. கடைசியில் அது கடலோடு கலந்து விடுகிறது. மலையில் தோன்றிய ஊற்று வேறு, கீழே வந்த சிற்றாறு வேறு,

பேராறு வேறு, கடலோடு கலந்த ஆறு வேறு என்று சொல்ல முடியுமா? அங்கே தோன்றிய ஊற்று நீர் கடலோடு கலக்கும்போதும் இருக்கிறது. ஆனால் பல்வேறு நிலையில் பல்வேறு விளைவுகளை உண்டாக்குகிறது. அருணகிரியார் கூறும் பக்திக்கு இதைத்தான் உதாரணமாகச் சொல்லலாம். தோன்றும்போது நெஞ்சில் நினைவாகத் தோன்றி, முடியும் போது இரண்டற்ற இன்பமயமாக ஆவது அருணகிரியார் காட்டும்பக்தி நெறி. இதை அவருடைய பாடல்கள் பலவற்றி லிருந்து உணரலாம்.

> பத்தித் துறையிழிந்து ஆனந்தவாரி படிவதனால்
> புத்தித் தரங்கம் தெளிவது என்றோ?

என்று அலங்காரத்தில் பாடுகிறார். பக்தித் துறையில் இழிந்தால் ஆனந்தம் என்ற கடலில் கலந்து கொள்ளலாம் என்பது அவர் கருத்து. பக்தித் துறை யாது? அது எங்கே தொடங்குகிறது? அது எப்படி விரிகிறது? பக்தி என்பது உணர்ச்சி, நம் உள்ளத்தில் தோன்றுகின்ற உணர்ச்சி வகைகளுக்குக் கொழுந்தாக இருக்கிறது அது. தோன்றும் போது அது சிறியதாகத் தோன்றும். அதாவது ஒருவனுக்கு முருகன்பால் அன்பு பிறந்தால் நினைப்பாகத் தோன்றும். அவன் முருகன் படத்தைப் பார்ப்பான். பின்பு அவனது கோயிலுக்குச் செல்வான். அவன் பாட்டைக் காதினால் கேட்பான். வரலாற்றைப் படித்து இன்புறுவான். பின்பு அதனுடைய தத்துவத்தை நன்கு உணர்ந்து தியானத்தில் அமர்ந்துவிடுவான். கண்ணாலே கண்ட முருகன் கோலத் தையும் காதாலே கேட்ட முருகன் உபதேசத்தையும் தனியாக இருக்கும்போது தன் நெஞ்சிலே புதையும்படி சிந்திக்கத் தொடங்குவான். அப்படித் தன் நெஞ்சிலே புதைக்கப் புகும்போது புறத்தில் தோற்றுகின்ற பொருள்கள் அத்தனையையும் களைந்துவிட்டு, தன் நெஞ்சில் வைத்துக் கொண்ட தோற்றத்தை நிலை நிறுத்தப் பார்ப்பான். முயற்சி

கைகூடி முருகனது தோற்றம் அவன் நெஞ்சில் சிதையாது இருக்கும்போது அவன் உணர்ச்சி ஒடுங்கி இருக்கும். அப்போது சமாதி நிலை கைகூடும். அதற்கு அப்பால் மெல்ல மெல்லப் பக்குவம் இயைந்து அநுபவ இன்பக் கடலில் வீழ்ந்து விடுவான்.

இதைப் பல்வேறு இடத்தில் அருணகிரியார் சொல்கிறார். "நான் பரமானந்த சாகரத்தைக் கண்டேன்" என்கிறார். அந்தச் சாகரம் எங்கேயிருந்து வந்தது? "என் புத்தியில் சிறிய ஊற்றாகத் தோன்றியது. வாழ்க்கையில் ஒரு பகுதியாக, இடம், காலம் ஆகிய எல்லைக்குள் அடங்கிய என் புத்தியில் தோன்றிய பக்தியாகிய உணர்ச்சி, மெல்ல மெல்ல வளர்ந்து எல்லைகளை உடைத்து எல்லையைத் தாண்டிய பரமானந்தக் கடல் ஆகிவிட்டது."

> "பத்தித் திருமுகம் ஆறுடன், பன்னிரு தோள்களுமாய்த்
> தித்தித் திருக்கும் அமுது கண்டேன்; செயல் மாண்டு [அடங்கப்
> புத்திக் கமலத்து உருகிப் பெருகிப் புவனம்எற்றித்
> தத்திக் கரைபுர ளும்பர மானந்த சாகரத்தே"

என்று அலங்காரத்தில் பாடுகிறார். அதனுடைய தோற்ற நிலை, புத்திக் கமலத்தில் புறப்படும் உருக்கம். அதன் முடிவு, புவனங்களை எற்றி அகண்டமாக இருக்கின்ற ஆனந்தக்கடல். புத்திக் கமலத்திலே தோற்றிய தோற்றம் அநுபவத்தின் முளை. பரமானந்த சாகரந்தான் அதன் முடிவாகிய கனிச்சுவை. பருப்பொருளாகத் தோன்றிய ஒன்று நுண் பொருளாகப் பரவுகிறது. நினைப்பாகத் தோற்றிய ஒன்றை, இன்ப அநுபவத்திற்கு மூலமாகத் தோற்றிய பக்தி என்று சொன்னால், முடிவைச் சித்தி என்று சொல்ல வேண்டும். இறைவன் திருவருளால் முதலில் முளையாகத் தோற்றிய அதுவே வளர்ந்து மரமாகிவிடுகிறது. பக்தி சித்திக்கு வழி என்று சொல்பவர் பிறர். பக்தியே சித்தியாகிவிடுகிறது என்பது அருணகிரியார் கொள்கை.

"பக்தி சித்திகாட்டி அத்தர் சித்தம் மீட்ட
பக்தருக்கு வாய்த்த பெருமாளே!"

என்பது ஒரு திருப்புகழ்.

வள்ளி யெம்பெருமாட்டி தவம் செய்யவில்லை; சாதன வகையில் ஈடுபடவில்லை. அவள் நெஞ்சில் முருக பக்தி இருந்தது. ஆனால் அந்தப் பக்தி ஞான வைராக்கியமாக வளரவில்லை. இந்திரிய நிக்கிரகமாக மாறவில்லை. வேடர் குலத்து உதித்த மங்கை ஆதலால் வேடர்களுக்குத் தெய்வமாகிய முருகனை நினைந்து நினைந்து ஆலோலம் பாடித் தினைப்புனம் காத்து வந்தாள். அவளுடைய உள்ளத்தில் பக்தி என்ற ஒன்று சிறிய வித்தாகத் தோன்றியது. அந்த வித்துக்கு நீர் பாய்ச்சியோ உரம் ஊட்டியோ வளர்க்கும் முயற்சியில் அவள் ஈடுபடவில்லை. ஆனால் கருணைப்பிரானாகிய கந்தவேள் அவ் வித்து முளைத்து, வளர்ந்து, தழைத்து, மரமாகிக் கனி குலுங்க வேண்டு மென்று திருவருள் கொண்டான். வித்தை அவளாக வளர்ப்பதைக் காட்டிலும் தானே சென்று வளர்த்தால் நிச்சய மாகப் பலன் தரும் என்ற நினைப்புப் போலும். அவன் இந்திர குமாரி இருக்கவும், 'கலாமயில் கூத்தயர் குளிர் புனம் மொய்த்திட்ட சாரலில் போய்ச்' சிறு குறவர் மகளாகிய வள்ளியெம் பெருமாட்டிக்குச் சலாமிடற்கு ஏக்கற்று நின்றான். தன் கருணைப் பிரவாகத்தினால் வித்தாக இருந்த வள்ளியின் பக்தியை வளரச் செய்து கனி கிடைக்கச் செய்தான்.

வள்ளியெம்பெருமாட்டியின் திருமணம் முருகனுடைய பெருங் கருணையைக் காட்டும் திருவிளையாடல். முருகனை நினைந்து உருகத் தொடங்கினால் அந்த உருக்கம் பெருக்க மாகிப் பரமானந்த சாகரத்தை மடுக்கச் செய்யும் என்பதை அந்தத் திருமணம் காட்டுகிறது. இதை அருணகிரியார் சொல்கிறார்.

"நாதா, குமரா, நம என்று அரனார்
ஓதாய் என ஓதியது எப்பொருள்தான்?"

என்று ஒரு கேள்வியைப் போட்டார். சிவபெருமானுக்குப் பிரணவத்தின் பொருளைச் சொன்னான் என்று கதை சொல்கிறது. அதை மாத்திரம் முருகன் சொல்லவில்லை. தன் அவதார விசேஷத்தையும் எடுத்து நுட்பமாகச் சொன்னான் என்றும் தெரிகிறது.

"வள்ளி சன்மார்க்கம் விள்ளைக்கு ஈத்த"

என்று ஓரிடத்தில் வருகிறது.

கருணை மிகுதியாலே பள்ளத்தில் கிடப்போரையும் எடுத்துக்கரை ஏற்ற வந்த அவதாரம் முருக அவதாரம். கருணை ஓடிக்கொண்டிருந்தது. அது மிகுதியாக ஆகவேண்டுமென்று 'கருணைகூர் முகங்கள் ஆறும் கரங்கள் பன்னிரண்டும் கொண்டு' முருகன் எழுந்தருளினான். கருணை கூர்தலாவது, கருணை பெறுவோரின் முயற்சி மிகச் சிறியதாக இருக்கவும் கருணை தருவோரின் முயற்சி பெருகி இருத்தல். இதை வள்ளியெம்பெருமாட்டியை ஆட்கொண்ட நிகழ்ச்சியில் வைத்துக் காட்டினான், முருகன். 'குற்றங்கள் இருந்தாலும் மறந்து, அன்பு வித்துத் தோன்றிய இடத்தில் அதை வளரச் செய்கின்ற பேரருளை வழங்குதற்கு நான் பிறந்தேன்' என்ற உண்மையை அவன் சிவபெருமானிடத்தில் சொன்னான். வள்ளி சன்மார்க்கம் என்பது அதுதான். அதனால்,

"நாதா குமரா நமஎன்று அரனார்
ஓதாய் என ஓதியது எப்பொருள்தான்?"

என்ற கேள்வியைக் கேட்டவர், அதற்குரிய விடையை நேராகச் சொல்லவில்லை. குறிப்பாகப் பின் இரண்டு அடிகளில் அதனை உணர்ந்து கொள்ளும்படியாக வைத்திருக்கிறார்.

"வேதா முதல் விண்ணவர் சூடும் மலர்ப்
பாதா, குறமின் பதசேகரனே"

என்று பேசுகிறார். "குறத்தியின் பாதத்தைத் தலையில்

வைத்துக் கொள்ளும் பெருமானே!'' என்று முடிக்கிறார். அதனோடு, "பிரம்மா முதலிய தேவர்கள் உன்னுடைய பாதத்தைத் தங்கள் தலையில் சூட்டிக்கொண்டிருப்ப, நீ சின்னஞ் சிறு குறத்தியின் காலை உன்னுடைய தலையில் வைத்துக் கொள்கிறாயே'' என்று முருகனைப் பார்த்துச் சொல்கிறார். 'சிவபெருமானுக்கு உபதேசம் செய்தது என்ன? வள்ளியெம்பிராட்டியை வணங்கின பெருமானே' என்று வந்துள்ள பாடலைப் பார்த்தால் இந்த இரண்டு செய்திகளுக்கும் தொடர்பு இல்லை போலத் தோன்றும். ஆனால் சிவபெருமானுக்குச் சொன்னதே, "நான் வள்ளியை வணங்கப் போகிறேன்'' என்பதுதான். 'இந்த அவதாரத்தில் வித்து மாத்திரமே நோக்கி, பக்குவம் நோக்காமல் அருள் செய்யும் பண்பு என்னிடத்தில் உண்டு' என்பதைச் சிவபெருமானுக்கு அறிவித்தான் என்பது அருணகிரியார் கருத்தாக இருக்க வேண்டும்.

சிவபெருமானுக்கு இந்த முறையைச் சொன்னதோடு அல்லாமல் நமக்கும் இந்த இரகசியத்தைச் சொன்னதாக அருணகிரியார் அலங்காரத்தில் பாடுகிறார்.

> "கின்னம் குறித்து அடி யேன்செவி
> நீஅன்று கேட்கச்சொன்ன
> குன்னம் குறிச்சி வெளியாக்கி
> விட்டது; கோடுகுழல்
> சின்னம் குறிக்கக் குறிஞ்சிக்
> கிழவர் சிறுமிதனை
> முன்னம் குறிச்சியில் சென்றுகல்
> யாணம் முயன்றவனே."

"யான் பலவகையாகத் துன்பப்பட்டேன். முற்பிறவியில் செய்த வினைகளின் பயனாகத் துன்புற்றது ஒரு பங்கு. இனி எம்பெருமானின் திருவருளை எவ்வாறு பெறுவது என்ற கவலையாலேயும் மிக்க துன்பப் பட்டுக் கொண்டிருந்தேன்.

இறைவன் திருவருளைப் பெறுவதற்குப் பலவகையான நெறிகளைச் சொல்கிறார்கள். பல நூல்களும் உள்ளன. அந்த நெறிகளில் புகுவதற்கு உரிய தகுதி என்னிடத்தில் சிறிதும் இல்லையே! அப்படி இருக்க நான் எவ்வாறு முருகன் திருவருளைப் பெறுவேன் என்று கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். நான் பட்ட கவலையை எம்பெருமான் குறித்துக் கொண்டு, 'இவனுக்கு வலிய அருள் செய்வேன்' என்று வந்தான். என் செவியில் தன் அவதார இரகசியத்தைச் சொன்னான். 'நான் உனக்கு அடிமை' என்ற நினைவை மாத்திரம் கொண்ட என் செவியில் கேட்கும்படியாகச் சொன்ன இரகசியத்தைக் குறிச்சி வெளியாக்கிவிட்டது" என்கிறார். குறிச்சி என்பது வள்ளியெம்பெருமாட்டி வாழ்ந்த குறிஞ்சி நிலத்து ஊர். எப்படி வெளியாக்கிவிட்டது என்பதைப் பின் இரண்டு அடிகளில் சொல்கிறார். "வள்ளியெம் பெருமாட்டியிடம் சென்று அவளைக் கல்யாணம் பண்ணிக் கொள்வதற்கு முயன்றவனே" என்று கூறுகிறார். 'என் செவி கேட்கச் சொன்ன இரகசியத்தை வள்ளி திருமணம் வெளியாக்கி விட்டது' என்று அவர் கூறுகிறார். அருணகிரி நாதர் திருச் செவியில் சொன்ன இரகசியம் எதுவோ, அது தான் சிவபெருமானின் காதிலே பிரணவப் பொருள் விளக்கத்துக்குப் பின் சொன்னதாக இருக்க வேண்டும். இதுவே அருணகிரியார் திருவுள்ளம்.

"வள்ளிச் சன்மார்க்கம் விள்ஐக்கு ஈத்த" என்ற திருப் புகழ்ப் பகுதியும், "செவி நீ அன்று கேட்கச் சொன்ன குன்னம் குறிச்சி வெளியாக்கி விட்டது" என்ற அலங்காரப் பகுதியும், "நாதா குமரா நம" என்ற அநுபூதிப் பாட்டும் இந்தக் கருத்தைக் குறிப்பாக வெளியிடுகின்றன.

எனவே, அருணகிரியார் திருவுள்ளம் யாது? வள்ளி திருமணத்தின் தத்துவம் என்ன? இந்த இரண்டு கேள்வி களுக்கும் ஒரே விடைதான் உண்டு. "பாசக் கட்டில் கட்டுப் பட்டிருக்கின்ற ஆன்மா தன்னுடைய உள்ளத்தில் சிறிது

அன்பைக் கொண்டு முருகா என்று சொல்லி உள்ளம் உருகினால் முருகப் பெருமான் அந்த அன்பை ஏற்றுக் கொண்டு, அந்த ஆன்மாவைப் பிரபஞ்சச் சேற்றினின்றும் எடுத்துத் தன் திருவடித் தாமரையோடு ஒன்ற வைக்கும் பெருங் கருணை படைத்தவன்.'' இந்த நம்பிக்கையைக் கொண்டு வாழ்வது அருணகியார் சொல்கின்ற பக்தி நெறி. ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொரு வகையான நெறியைப் பின்பற்றி வாழ்வதிலும் தாம் க்டைப்பிடித்த ஒரு நெறியே மேலும் மேலும் வளர்ந்து பயன் தரும்படி அமையும் என்பதே அருணகிரியார் காட்டும் பக்தி நெறி.

நாரதர் பத்தி சூத்திரத்தில் பக்தியைப் பற்றிச் சொல்லும் போது ''தத் பலத்வாத்'' என்று வருகிறது. பக்தி என்பது ஒரு கருவியாகவும் முத்தி என்பது ஒரு பயனாக வும் இருப்பதாக நினைக்கும் நினைப்பை அந்தச் சூத்திரம் மாற்றுகிறது. பக்தியே முடிந்த முடிவாகிய பலனாக நிற்கும் என்பது அந்தச் சூத்திரத்தின் கருத்து. அந்த வகையில் வாழ்கின்ற ஒவ்வொருவரும் நிச்சயமாக அத்தகைய அநுபவம் பெறலாம் என்ற நம்பிக்கையை ஊட்டித் தம்முடைய அற்புதமான திருவாக்கினாலே வற்புறுத்திய பெருங் கருணையாளர் அருணகிரியார். பக்தியிலே தொடங்கி, பக்தியிலே விளைந்து, பக்தியிலே மடங்கி, பக்தியிலே இன்பம் பெற்றுக் கரைவதுதான் அருணகிரியார் திருவுள்ளம்.

# கால தரிசனம்

முருகன் தன் அன்பர்களுக்கு என்றும் துணையாக நிற்ப வன். எத்தகைய இடையூறுகள் வந்தாலும் முன்நின்று காப் பவன். உயிர்களுக்கு வரும் துன்பங்களில் மிகப் பெரிது இறப்பாகிய துன்பம். "காலன் வரும்போது என்ன துன்பம் உண்டாகுமோ?" என்று கதறி அழுத மக்கள் பலர். யமபயம் உண்மையில் ஒருவனுடைய உள்ளத்தில் பதிந்துவிட்டால் அவன் உடனே அந்தப் பயத்தைப் போக்கிக்கொள்ளும் வழி என்னவென்று ஆராய்வான். இறைவனைப் புகல் புகுவது ஒன்றுதான் அதற்குப் பரிகாரம் என்பதை உணர்ந்து பக்தி செய்ய முற்படுவான்.

> "ஆவிக்கு மோசம் வருமாறு அறிந்துன் அருட்பதங்கள்
> சேவிக்க என்று நினைக்கின்றிலேன்"

என்று அருணகிரிநாதர் கூறுகிறார். முருகனை வழிபட்டு அன்பு நெறியில் நிற்பவருக்கு யமபயம் இல்லை என்பதைப் பல இடங்களில் அவர் எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

> "காலாயுதக்கொடியோன் அருளாய கவசம் உண்டு என்
> பால் ஆயுதம் வருமோ யமனோடு பகைக்கினுமே"

என்று படர்க்கையிலும்,

> "வாராது அகல் அந்தகா வந்த போதுயிர் வாங்குவனே"

> "கட்டிப் புறப்படடா சக்தி வாள் என்றன் கையதுவே"
> "திண்டாட வெட்டி விழவிடுவேன்"

என்று முன்னிலையிலும் வைத்துப் பாடுகின்றார்.

உடம்பு எடுத்த உயிர்கள் இறந்துபடுவது உறுதி. ஆனால் மரணத்தில் இரண்டு விதம் உண்டு. பிறக்கும் பொருட்டு இறப்பது, மீட்டு இங்கு வாராமல் வீட்டின்பத்தை அடைய இறப்பது என்பன அவை. இறைவனுடைய திரு வருள் பெற்று வாழ்பவர்கள் உடம்பை விடும்போது விடுதலை பெற்றவராகி அவனடியை அடைகிறார்கள். மற்றவர்கள் வேறு பிறவியை எடுக்கிறார்கள்.

நல்ல ஆன்மாக்கள் உயிர்விடும்போது அவர்கள் உயிர் களை இறைவனுடைய ஏவலாளர்களாகிய கணங்கள் வந்து அழைத்துச் செல்லும் என்று புராணங்கள் கூறுகின்றன. அவ்வுயிர்கள் மரணத்தால் துன்பம் அடையாமல் இன்ப வாழ்வின் தலைவாசல் திறந்தது போன்ற நிலையை அடை வதையே அப்படிச் சொல்லியிருக்கிறார்கள். அதற்கு நேர் மாறாக, அருள்பெறா உயிர்களை, மீட்டும் பிறக்க வேண்டி யிருக்கும் ஆன்மாக்களை, கால தூதுவர்கள் அழைத்துச் செல்ல வருவார்கள் என்று புராணங்கள் கூறுகின்றன. மேலும் மேலும் துன்புறும் நிலையில் உள்ளவை அவ்வுயிர்கள் என்பதையே அது குறிக்கின்றது.

முருகனுடைய திருவருளைப் பெறாதவர்கள் உயிர் விடும் போது காலனுடைய தரிசனத்தைத்தான் பெறுவார்கள். அருள் பெற்றவர்களோ முருகன் தரிசனத்தைப் பெறுவார் கள். காலன் தரிசனமும் வேலன் தரிசனமும் அந்த ஆன்மாக் கள் இந்த உலக வாழ்வில் செய்த செயல்களைப் பொறுத்தே கிடைக்கின்றன.

"முருகனுடைய அடியார்களுக்கு உயிர்விடும் காலையில் கால தரிசனம் இராது" என்று சொல்வதுதான் பொருத்த மாக இருக்கும். அருணகிரிநாதர் திருவாய் மலர்ந்தருளிய திருப்புகழில் ஓரிடத்தில் இதற்கு மாறான பொருள்கொள்ளும் வகையில் ஒரு பகுதி வருகிறது.

"புவிக்குன் பாத மதைநினை பவர்க்கும்
காலதரிசனை புலக்கண் கூடும் அதுதனை—நினையாதே
புரட்டும் பாவ சமயிகள் நெறிக்கண்
புகுது படிறரை."

இந்தப் பாட்டுக்கு, "உலகில் நின் திருவடியை நினைபவருக்கும் காலதரிசனம் கண்ணாகிய புலனில் தோன்றும். அந்த உண்மையை நினையாமல் புரட்டிப் பேசும் பாவிகளாகிய சமயிகளுடைய வழியிலே புகும் வஞ்சகரை" என்று பொருள் கொள்ளலாம்.

"புவிக்கு உன்பாதமதை நினைபவர்க்கும் கால தரிசனை புலக்கண் கூடும்" என்ற பகுதிதான் இங்கே ஆராய்ச்சிக்கு உரியது. புவிக்கு என்பது புவியில் என்னும் பொருள் உடையது; உருபு மயக்கம். பாதமதை—பாதத்தை; அது: பகுதிப் பொருள்விகுதி. 'உன் திருவடியை நினைப்பவர்களுக்குக் கால தரிசனை கண்ணில் படும்' என்று பொருள்கொள்ளும்படி இப் பகுதி அமைந்திருக்கிறது. அருணகிரிநாதர் பிற இடங்களில் கூறும் கருத்துக்கு இது மாறுபாடாக இருக்கிறது. அது மட்டும் அன்று; 'நினைபவர்க்கும் கால தரிசனை கூடும்' என்பதில் வரும் உம்மைக்கு ஒரு பொருளும் இருப்பதாகத் தோன்றவில்லை. மற்றவர்களுக்குத் தோன்றுவதோடு, அவர்களுக்கும் தோன்றும் என்று கொள்ளலாமா? அது சிறப்பன்று; பொருத்தமாகவும் இல்லை.

இந்த அடி, "உன்னை நினைக்கிற அன்பர்களுக்கும் காலன் தரிசனை கூடுமா? அவர்கள்முன் அவன் தலையை நீட்டுவானா?" என்று பொருள்பண்ணும்படி இருந்தால் மிகவும் பொருத்தமாக இருக்கும். அப்போது உம்மைக்குப் பொருள் கிடைக்கும். அது உயர்வு சிறப்பும்மையாகிவிடும்.

"புலக்கண் கூடுமா?" என்று வினாப் பொருள் கிடைத்தால் இந்தப் பகுதி சிறப்பாகவும் பொருத்தமாகவும் அமையும். "புலக்கண் கூடும்" என்பது சந்தத்தில் அமைந்த

மையால், அங்கே வினவைக் குறிக்கும் இடைச் சொல் இருந்து, போயிருக்க வேண்டும் என்று சொல்ல இயலாது. ஆதலால் பாடபேதம் இருக்கலாம் என்று சொல்வதற்கும் வழியில்லை.

"புலக்கண் கூடும்" என்பதையே வினவாகக் கொள்ள வழி உண்டா? இதைச் சற்று இங்கே ஆராயலாம்.

நாம் பேசும்போது சில சமங்களில் வின எழுத்தை உபயோகிக்காமலேயே தொனி வேறுபாட்டால் வின வென்பதைக் குறிப்பிக்கிறோம். "ராமன் வந்தான்; கண்ணன் வந்தான்; கோபாலன் வந்தான்" என்று வந்தவர்களை ஒருவர் சொல்கிறார். அப்போது "முருகன்?" என்று ஒருவர் கேட்கிறார். முருகன் என்ற சொல்லில் வினவைக் குறிக்கும் எழுத்து இல்லாவிட்டாலும் பேசுகிற வர்களுடைய குரல் வினவைப் புலப்படுத்துகிறது.

"பம்பாய் நெடுந்தூரத்தில் இருக்கிறதே. அங்கே போய் நீ வேலை பார்ப்பாய்?" என்று வரும் பேச்சில் 'வேலை பார்ப்பாயா' என்ற பொருளில் 'வேலை பார்ப்பாய்' என்ற தொடர் வருகிறது. இப்படி வருவதைக் காகு என்றும் காகு சுரம் என்றும் வடமொழியாளர் கூறுவர்.

பெரியபுராணத்தில் ஓரிடத்தைப் பார்க்கலாம். சேக்கிழார் கூறும் அவையடக்கப் பாட்டு. "அருளின் இயல்பால் புரியும் திருத்தொண்டை அறிவதற்கரிய, தெளிவில்லாத நீர் இந்தப் புராணம் செய்யலாகுமா என்று கேட்டால், அச்சம் இல்லாத மெய்யாகிய மொழியை வான் நிழலாகிய அசரீரி கூறிய உண்மையின் வலிமையால் ஆகும் என்று சொல்வோம்" என்கிறார்.

> "அருளின் நீர்மைத் திருத்தொண்டு அறிவரும்
> தெருள்இல் நீர்இது செப்புதற் காம்எனின்
> வெருளில் மெய்ம்மொழி வான் நிழல் கூறிய
> பொருளின் ஆகும் எனப்புகல் வாம்அன்றே"

என்பது பாட்டு. "நீர் இது செப்புதற்கு ஆம்?" எனின், "ஆகும் எனப் புகல்வாம்" என்கிறார். இங்கே, "நீர் செப்புதற்கு ஆம்" என்பது, "நீர் செப்புதற்கு ஆகுமா?" என்று வினாப் பொருளில் வந்தது. ஆகுமா என்ற கேள்விக்கே பின்பு ஆகும் என்று விடை கூறுகிறார். "உமக்குத் தெளிவில்லையே; செப்புதற்கு ஆகுமா?" என்று கேட்பவர் காரணத்தோடு கேட்க, "என் தெளிவைக் கொண்டு நான் புகலவில்லை. வான் நிழல் கூறிய பொருளின் ஆற்றலால் செப்பல் ஆகும்" என்று காரணத்தோடு விடை பகர்வதாகப் பாட்டு அமைகிறது. இங்கே, "செப்புதற்கு ஆம்" என்றது காகு; தொனி வேறுபாட்டால் வினாப்பொருளைத் தரும் தொடர்.

> "புவிக்குன் பர்தமதைந் நினை பவர்க்கும்
> கால தரிசனை புலக்கண் கூடும்"

என்பதையும் காகுவாகக் கொண்டு, "அத்தகைய அன்பர்களுக்கும் காலன் முன் நிற்பானா? கால தரிசனை புலக்கண் கூடுமா?" என்று பொருள் கொண்டால், உம்மைக்கும் பொருள் கிடைக்கிறது; பாட்டுக்கும் பொருத்தமான பொருள் அமைகிறது.

> "மாகத்தை முட்டி வரும்நெடுங் கூற்றன் வந்தால்
> என்முன்னே
> தோகைப் புரவியில் தோன்றி நிற்பாய்"

என்ற வேண்டுகோளுக்கு இணங்க, தன்னை நினைப்பவர்களுக்குக் கால தரிசனம் கிட்டாமல் மயில் வாகனக் கோல தரிசனம் காட்டும் பிரான் அல்லவா முருகன்?

# இடும்பைக் குன்று

மனிதன் தன்னுடைய வாழ்வில் இன்பம் துன்பம் என்னும் இரண்டையுமே அநுபவிக்கிறான். புண்ணியத்தின் பயனை மட்டும் நுகர்பவர்கள் தேவர்கள். பாவத்தின் பயனை மட்டும் நுகர்பவை விலங்கினங்கள். புண்ணியம் பாவம் என்னும் இரண்டின் பயனையும் நுகர்பவன் மனிதன். அந்த இரண்டும் கலந்த வினைக்கு மிசிரகர்மம் என்று பெயர். அதன் பயனாக இன்பம், துன்பம் என்னும் இரண்டையும் அநுபவிக்கிறான்.

ஆனால் மனிதன் தான் பெற்ற துன்பத்தையே எண்ணி எண்ணி ஏங்குகிறான். வெங்காய வடை தின்றவன் வாயில் வடையில் உள்ள மற்றப்பகுதிகளின் சுவை நெடு நேரம் நில்லாது; வெங்காயத்தின் சுவைமட்டும் நெடிது நிற்கும். அது போலவே மனிதனுக்கு இன்பம் நுகர்ந்த நினைவு நெடு நேரம் நிற்பதில்லை; துன்ப நினைவே மனத்தில் வண்டலிடு கிறது. இன்ப துன்பங்களை ஒரு நிலையனவாகப் பார்க்கிற ஞானிகளுக்கு அவற்றால் எந்த விளைவும் உண்டாவதில்லை. மற்றவர்களுக்கோ துன்பமே மனத்தில் பதிந்திருப்பதனால் வாழ்வே துன்பம் என்று தோன்றிவிடுகிறது. குழந்தைகளும் ஞானிகளும் இதற்கு விலக்கு.

எவை எவை இன்பத்துக்கு ஏதுவானவை என்று புகுகிறானோ அவற்றையே துன்பத்துக்குக் காரணம் என்று உணர்கிறான். சுற்றத்தாரால் வரும் இன்பத்தைக் காட்டிலும் துன்பமே மிகுதி. உணவினால் வரும் இன்பத்தைவிடத் துன்பம் மிகுதி. இப்படியே ஒவ்வொன்றாலும் அவன் துன்பத்தை அடைந்து கொண்டிருக்கிறான்.

"யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்"

என்பது திருக்குறள். அதை வேறு வகையாகச் சொன்னால்,

"யாதனின் யாதனின் தேங்கியான் நோதல்
அதனின் அதனின் உளன்"

என்று வேறு குறளையே சொல்லிவிடலாம்.

இவ்வாறு வருகிற துன்பங்கள் நாளாக ஆக வளர்ந்து வருகின்றன. முயற்சி வளர வளர, உடம்பு வளர வளர, சுற்றம் வளர வளர, துன்பங்களே வளர்கின்றன. நாளாக ஆக உடல் தளர்கிறது; அதனால் நாம் துன்பம் அடைகிறோம். நம் தளர்ச்சியைக் கண்டு நம்மை அணுகுவோர்கள் அணுகுவதில்லை; அதை நினைத்தால் மிக்க துயரம் ஊறுகிறது.

மனிதப் பிறவியே துன்பந்தான் என்று பெரியவர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

"பிறந்தார் உறுவது பெருகிய துன்பம்"

என்பது மணிமேகலை.

ஒரு பிறவியில் மாத்திரமா இந்தத் துன்பம்? பிறவி தோறும் துன்பம் குவிகிறது; மலைமலையாகக் குவிகிறது. இந்த மலையைப் போக்க ஓர் உபாயமும் இல்லையா? நமக்கு அவ்வாறு செய்யும் ஆற்றல் இல்லை. ஆனால் வேறு யாருடைய உதவியையாவது கொண்டு இந்த இன்னலெனும் மலையை அழித்துவிட முடியுமா?

மலையை அழித்தவர்கள் யார் இருக்கிறார்கள்? ஓ! இப்போது நினைவுக்கு வருகிறது. முருகன் கிரௌஞ்ச மென்னும் மலையை அழித்தான். தன் திருக்கரத்திலுள்ள வடிவேலை ஏவி அந்த வெள்ளிமலையைப் பொடிப் பொடி

யாக்கினான். அந்தப் பெருமான் இந்தத் துன்பமலையையும் பொடியாக்கிவிட மாட்டானா?

இந்த எண்ணம் ஒரு பக்தருக்குத் தோன்றியது. அவர் கந்த புராணத்தைப் புரட்டிப் பார்த்தார். கிரவுஞ்சமலையை முருகன் பொடி படுத்திய கதையை மறுபடியும் படித்துப் பார்த்தார். கந்த புராணம் முழுவதையுமே படித்து இன்புற்றார்.

ஒரே ஒரு முறை ஒரு மலையை வடிவேலால் பொடி யாக்கினான் முருகன். அதற்குப் பிறகு அந்த வேலுக்கு வேலையே இல்லாமல் போய்விட்டது. அப்புறம் எந்த மலையையாவது அது துளைத்ததோ? அப்படிக் கேள்விப் படவே இல்லை. ஒன்றுக்கும் பயன்படாமல், என்றோ ஒரு நாள் ஒரு மலையைப் துளைத்ததென்று அந்த வேலை ஏந்தி நிற்கலாமோ? அதற்கு வேலை இருந்தால் கையில் ஏந்தி நிற்கலாம். அப்போதுதான் அதற்கு மதிப்பு உண்டு. இல்லா விட்டால் வேல் துருப்பிடித்துப் போய்விடாதா?

"சுவாமி, உம்முடைய வேலுக்கும் வேலை வைத்து எனக்கும் உபகாரம் செய்யவேண்டும்" என்று அந்தப் பக்தர் வேண்டிக்கொண்டார்.

"முன்னமே ஒரு மலைமேல் வேலை விட்டு மாய்த்தாய். வேலாலே சூரனைக் கொன்றாய். அந்த வேலை இப்போது என்னிடம் உள்ள துன்பம் என்னும் பெருமலையை நோக்கி விடுவது பொருத்தமாக இருக்கும். வேலை வீச இலக்கு இல்லாமல் இருந்தாய் அல்லவா? இப்போது அந்த வேலின் தினவு தீர எனது இடும்பைக் குன்றின்மேல் ஏவு அப்பா!" என்று இரந்து நின்றார். அவர் புலவர் ஆதலின் அந்த வேண்டுகோள் பாட்டாக வந்தது.

**இன்னம் ஒருகால் எனதிடும்பைக் குன்றுக்கும்**
**கொன்னவில் வேல் சூர்தடிந்த கொற்றவா—முன்னம்**

**பனிவேய் நெடுங்குன்றம் பட்டுருவத் தொட்ட**
**தனிவேலை வாங்கத் தகும்.**

[அச்சத்தைப் பயின்ற வேலாலே சூரனை அழித்த பெருமானே, முன்பு பனி மூடிய உயர்ந்த மலையாகிய கிரவுஞ்சத்திலே பட்டு உருவப் பிரயோகஞ் செய்த இணையில்லாத வேலாயுதத்தை, இன்னும் ஒரு முறை என் துன்பமாகிய குன்றின்மேலே ஏவலாம்; அது பொருத்தமாக இருக்கும்.]

எல்லோருமே முருகனைப் பார்த்துச் சொல்ல வேண்டிய பாட்டுத்தான் இது.

# தொட்டிலில் வளரும் முருகன்

சோழ நாட்டில் விளத்தொட்டி என்ற ஊர் இருக்கிறது. குத்தாலம் ரெயில்வே நிலையத்துக்கு வடக்கே உள்ளது அது. அந்த ஊரில் முருகக்கடவுள் தொட்டிலில் வளரும் குழந்தையாக, இள முருகனுகக் காட்சி அளிக்கிருன். அந்த ஊருக்கு வில்வவனமென்றும், கூவிளங் காடென்றும் பெயர்கள் உண்டு. கூவிளம் என்பது வில்வத்துக்குப் பெயர். கூவிளம் என்பதிலுள்ள பிற்பகுதியும் முருகன் வளரும் தொட்டிலால் சிறப்புடைமையால் தொட்டி என்னும் பெயரும் இணைந்து விளத்தொட்டி என்ற பெயர் வந்ததாம். தொட்டிலைத் தொட்டி என்றும் வழங்குவர். முருகன் தொட்டிலில் என்றும் இளைய குழந்தையாக வளர்வதனுல் அந்த ஊரில் இன்றும் யாரும் குழந்தைகளைத் தொட்டிலில் விடுவதில்லை. துணியைக் கட்டி அந்தத் தூளியில் விடுவதே வழக்கமாக இருக்கிறது.

இந்தத் தலத்துக்கு ஒரு தமிழ்ப் புராணம் இருக்கிறது. அதனைப் பாடியவர் திரிசிரபுரம் மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளையவர்கள். அந்தப் புராணத்தில் முருகன் இங்கே தொட்டிலில் வளரும் வரலாற்றைச் சொல்லும் "விளத்தொட்டிப் படலம்" என்ற பெயருடன் ஒரு படலமே இருக்கிறது. அந்த வரலாற்றை இங்கே பார்க்கலாம்.

வில்வ வனமாகிய விளத்தொட்டியில் எழுந்தருளியிருக்கும் அம்பிகை கரும்பிரத நாயகி. சிவபெருமானுக்கு வில்வ மூல நாதர் என்று திருநாமம்.

எம்பெருமானும் எம்பெருமாட்டியும் இந்தத் திருத்தலத்தில் எழுந்தருளி, வந்து பணிவார்களுக்கு வேண்டிய நலங்களை வழங்கி மகிழ்ந்திருந்தனர். அப்போது தனக்கு-

ஒரு மகவு வேண்டும் என்ற விருப்பம் அம்மைக்கு உண்டாயிற்று.

எப்போதும் கன்னியாக இருக்கும் அம்மை இந்தத் தலத்தில் ஒரு திருவிளையாடலை நிகழ்த்தக் கருதினாள். இறைவன் சுடர்க் கண்ணிலே பொறியாகத் தோன்றிப் பின்பு சரவணப்பூம் பொய்கையில் ஆறு வேறு குழந்தைகளாக வளர்ந்த முருகனைத் தன் கையால் அணைத்து ஓர் உருவமாக்கிப் பொற்கிண்ணத்தில் கறந்த பாலை ஊட்டியருளினாள், முன்பு. முருகன் தன் திருவயிற்றில் பிறந்து, குழந்தைக்குச் செய்யவேண்டிய அருமைப்பாடுகளையெல்லாம் செய்து அவனை வளர்க்கவேண்டும் என்று திருவுள்ளங் கொண்டாள், எம்பிராட்டி. இறைவனும் உடம்பட்டான்.

அவ்வாறே முருகனைக் கருக்கொண்ட பிராட்டி ஒரு நல்ல நாளில் குழந்தையைக் கருவுயிர்த்தாள்.

**"இருநகிலும் பச்சைநரம் பெழுந்தோட மெய்விளர்ப்பக்**
**கருமுதிர்ந்து, பெருந்திருப்பாற் கடல்உயிர்த்த முழுமதிபோல்,**
**பொருவில்சலஞ் சலம்உயிர்த்த முத்தேபோல், பொற்புமலி**
**திருமகவை இனிதுயிர்த்தாள் சேண்உலகெலாம்உயிர்த்தாள்."**

[நகில் - தனம். விளர்ப்ப - வெண்ணிறம் பூண. உயிர்த்த - பெற்ற. பொரு இல் - ஒப்பற்ற. சலஞ்சலம் - உயர்ந்த சாதிச் சங்கு. சேண் உலகு - நெடுந்தூரம் பரவிய உலகங்கள். உயிர்த்தாள் - பெற்றாள்.]

பிறந்த குழந்தையைக் கண்டு அளவற்ற மகிழ்பூத்து என்னெய் நீராட்டினாள் கரும்பிரத நாயகி. திருமகளும் கலைமகளும் அம்மைக்குப் பாங்கியராக இருந்து ஏவல் புரிந்தார்கள். நீராட்டி மெய் துடைத்துத் திருநீற்றுக் காப்பு அணிந்து பால் கொடுத்து வளர்த்தாள். கண்கொள்ளா அழகுடன் குழந்தை வளர்ந்து வந்தது.

முருகன் குப்புறக் கிடந்து ஒரு காலை மேலே தூக்கி உதைந்து செங்கீரையாடினான். பொற்றொட்

உறங்கினான். அம்மை தாலாட்டினாள். அவன் இருந்து சப்பாணி கொட்டினான். தன் தாய் தந்தையர் ஆவலுடன் அணைக்க அவர்களுக்கு முத்தம் அளித்து உவகை ஊட்டினான். மெல்ல மெல்லத் தளர்நடையிட்டு நடந்தான். அப்போது உமையும் பிறரும்,

"வருகசுரர் குலக்கொழுந்தே, வருகமறைப் பெருந்திருவே,
வருகமழ இளங்களிறே, வருகஅருட் பசுங்குருந்தே,
வருகசுடர் மணிவிளக்கே, வருகநறுஞ் சுவையமுதே,
வருகஇரு கண்மணியே, வருக வருக"

என்று ஆவலோடு அழைத்து இன்புற்றனர். அம்புலி மானை முருகன் வாவா என்று அழைத்தான். திருவீதியிற் சென்று புழுதி திருமேனியிற் படிய விளையாடிச் சிறுமியர் கட்டிய சிற்றில்களையெல்லாம் தன் திருவடியால் சிதைத்தான். சிறு பறை கொட்டினான். சிறு தேர் உருட்டினான்.

இப்படிக் குழந்தை பலவகை விளையாடல்களையும் அயர்வது கண்டு கண்ணும் மனமும் குளிர்ந்தாள், கரும்பிரத நாயகி. உச்சியில் கொண்டை அணிந்து, நுதலில் பொட்டணிந்து, கண்ணுக்கு மையிட்டு, காதுக்குக் குதம்பை புனைந்து, மார்பில் ஐம்படை புனைந்து, அரைக்கு மணி கட்டி, காலுக்குத் தண்டை பூட்டி அழகு கண்டு மகிழ்வுற்றாள். அவனை அணைத்து அணைத்து இன்புற்றாள். பலகால் முத்தமிட்டுப் புளகம் போர்த்தாள். அவன் நடப்பதைக் கண்டு கண்டு பூரித்தாள். மென்மழலை கேட்டு உவகைக் கடல் குளித்தாள். இப்படியே என்றும் இளம் பருவம் மாறாமல் முருகன் குழந்தையாகவே இருக்க, தான் அவனை இடைவிடாமல் சீராட்ட வேண்டுமென்ற ஆர்வம் உண்டாயிற்று, அம்மைக்கு.

தன்னுடைய விருப்பத்தை இறைவனிடம் தெரிவித்தாள் கரும்பிரதநாயகி. "எம்பெருமானே, இளங் குழந்தையினால் தாய் தந்தையர் அடையும் இன்பத்துக்கு ஈடாக எதுவுமே இல்லை. குழந்தைப் பருவம் தீர்ந்து பெரியவனானால் கொஞ்சி

அணைத்து முத்தமிட்டுச் சீராட்டி அவற்றால் வரும் இன்பம் அடைய முடியாது. இவன் என்றும் இளையனாக இருந்தால் என்றும் மாறாத இன்பம் அடையலாம். இவனைச் சரவணத்தில் குழந்தையாக அடைந்தபோது அமரர்கள் சூரனை அழிக்க வேண்டுமென்று வேண்டினார்கள். அதனால் குழந்தையாக இருந்தவன் குமரனாக வளர்ந்தான். அமரர் சேனைத் தலைவனானான். சூரசங்காரம் செய்தான். குழந்தையினிடம் காணும் இன்பத்தை எப்போதும் பெற இயலவில்லை. அப்படி இன்றி இத்தலத்தில் இவன் என்றும் இளைய குழந்தையாக இருக்கும்படி அருள் புரியவேண்டும்'' என்று வேண்டினாள்.

''உன் விருப்பம் நிறைவேறட்டும்'' என்று இறைவன் திருவருள் பாலித்தான்.

''எப்போதும் தொட்டிலில் விட்டுத் தாலாட்டுப் பாடி இன்புற' ஆவல் எழுகிறது, ஆதலின் முருகன் தொட்டிற் பருவத்தினனாக இருக்கவேண்டும். இந்த ஊருக்கும் தொட்டியினால் பெயர் அமையவேண்டும்" என்று பின்னும் வேண்டினாள் பிராட்டி.

இறைவன், ''அவ்வாறே ஆகுக'' என்று அருளினான். அன்றிலிருந்து இங்கே முருகன் தொட்டியில் வளரும் இள முருகனாகவே எழுந்தருளியிருக்கிறான். அவன் தொட்டியில் வளர்வதனால், அவனுக்குச் சமானமாக மானிடக் குழந்தைகளுக்குத் தொட்டில் இடுவது முறையன்று என்று எண்ணி, இந்த ஊரினர் தம் குழந்தைகளைத் தொட்டிலில் விட்டுத் தாலாட்டுவதில்லை; தூளி முதலியவற்றில் விட்டு உறங்கச் செய்கின்றனர்.

> ''தொட்டியமர்ந் தொருபால சுப்பிரம ணியச்செம்பொற்
> கட்டிஇனி தென்றும்உறுங் காரணத்தால் அனையவிளத்
> தொட்டிநகர் வாழ்வார்தம் சூழ்மனையின் மழத்தொட்டி
> கட்டிஅறி யார்வேறு கட்டிவளர்த் தோங்குவார்.''

[தொட்டி - தொட்டில். மழத்தொட்டி - குழந்தைகளுக்குரிய தொட்டில். வேறு - வேறு வகையான தூளி முதலியவற்றை. வளர்த்து - உறங்கச் செய்து.]

அங்கங்கே இப்படி முருகன் சம்பந்தமாகப் பல வரலாறுகள் வழங்கி வருகின்றன. அவை அனைத்தும் கந்தபுராணக் கதைக்குப் புறம்பாக இருக்கலாம். சில சிறந்த கருத்தோடு இருக்கலாம். சில அவ்வளவு உயர்ந்தனவாக இராமலும் இருக்கலாம். ஆயினும் முருகப் பெருமானை என்றும் குழந்தையாகவே வைத்து வழிபடும் ஆவலால் அப்படி ஒரு சிற்பமும் அதற்கு ஒரு வரலாறும் அன்பர்கள் அமைத்துக்கொண்டார்கள் என்று ஆராய்ச்சி மனப்பான்மையோடு முடிவுகட்டலாம். எப்படியானாலும் முருக வழிபாடு தமிழர் நெஞ்சில் எப்படியெல்லாம் புகுந்து உருவாகிறது என்பதற்கு இது ஓர் எடுத்துக்காட்டு.

# சேந்தன் காதல்

தேவர்கள் புடைசூழ முருகன் திருவீதியில் உலா வந்தான். இசைக் கருவிகள் முழங்க, அந்தணர் மறை ஓத, அரம்பையர் வாழ்த்தெடுப்ப, அன்பர்கள் புகழ் பாட ஒளி மயமான சூழலுக்கு நடுவே தன்னுடைய அருட்சோதியைப் பரப்பிக்கொண்டு பச்சைப் பசு மயில்மேல் அவன் பவனி வந்தான். அழகுக்கு ஒருவரும் ஒவ்வாத பேரழகன், என்றும் குன்றாத சீரிளமையோன் உலா வந்தால் அன்பர்கள் சும்மா இருப்பார்களா? அவனுடைய திருமேனி யழகில் சொக்கிப் போய்த் தம்மை மறந்து நின்றனர். விண்ணவர் வியந்து நின்றனர். மகளிர் அந்த அழகுக் கடலுக்குக் கரைகாணுமல் தம் கண்களாகிய மீன்களை அதில் உலாவ விட்டனர்.

அவர்களுள் ஓர் இளம் பெண் ஆறுமுகத்தையனுடைய பேரழகிலே உள்ளத்தைப் பறி கொடுத்தாள். பெண் பிறவி யெடுத்த பேருக அவனையே காதலனுக உள்ளத்தில் வரித்துக் கொண்டாள். அவன் திருவடி முதல் திருமுடி வரையில் கண்களால் ஊடுருவிப் பார்த்தாள். அவன் தனக்காகவே திருவீதியில் உலா வந்ததாக எண்ணிப் பூரித்தாள். கள் குடித்தவள் போல் ஆடினுள், பாடினுள்; மனத்தில் ஒருவகை நிறைவை எய்தினுள். 'உலகத்தில் ஆண்களே இல்லை; இவன் ஒருவன்தான் ஆண். இவனை நோக்க மற்ற ஆண்கள் யாவருமே பெண்கள்தாம். இந்த ஆணழகனை, இந்த நம்பியை, இந்தப் புருஷோத்தமனைக் காதலனுக அடைவதுதான் பெண்ணுய்ப் பிறந்த பிறவிக்குப் பயன்' என்று துணிவு பூண்டாள். அவள் கண்களில் ஓர் ஒளி; அப்பால் இன்பக் கண்ணீர். புறத்தே கண்ட முருகன் காட்சியை அகத்தேயும்

கண்டு இன்புற்றாள். கண்மூடி மோன யோகியைப் போல நின்றிருந்த அப் பேதை கண்ணைத் திறந்து பார்த்தாள். முருகன் நெடுந்தூரம் சென்றுவிட்டான்.

சோழ நாட்டில் உள்ள திருவிடைக்கழி யென்னும் திருத் தலத்துக்கு அந்தப் பெண் வந்திருந்தாள். வந்தபோது நிகழ்ந்தது இது. உணர்வு வந்த நங்கைக்கு முருகனைத் தொடர்ந்து செல்ல வேண்டும் என்ற அவா எழுந்தது. எவ் வளவு தூரந்தான் அவள் போக முடியும்? அவளுடன் வந்த தோழிமார்கள் அவளை அழைத்தார்கள். கலகலப்பாகப் பேசிக்கொண்டிருந்தவள் திடீரென்று பிரமை பிடித்தவளைப் போல நிற்பதைக் கண்டு அவர்களுக்கு வியப்பாக இருந்தது; அச்சமும் உண்டாயிற்று. 'இவளைக் கூட்டிக்கொண்டு போய் இவள் வீட்டில் விட்டுவிடலாம், இனியும் இங்கே நிற்பது கூடாது' என்று எண்ணிய அவர்கள் அந்த அழகியை அழைத்துக்கொண்டு அருகில் உள்ள தம் ஊரை அடைந் தார்கள். அந்தப் பெண்ணின் வீட்டுக்குச் சென்று அவளை விட்டுவிட்டு அவளுடைய தாயிடம், "உங்கள் பெண்ணுக்கு ஏதோ உடம்பு சரியில்லைபோல் இருக்கிறது" என்று தனியே சொல்லிப் போய்விட்டார்கள்.

வீட்டுக்கு வந்தவள் திருவிடைக்கழியிலே கண்ட காட்சி யிலே உள்ளத்தை நிறுத்தி வேறு ஒன்றும் தோன்றாமல் இருந்தாள். வழக்கம்போல் பேசுவதும் விளையாடுவதும் தாய்க்கு உதவியாக வீட்டு வேலைகளைச் செய்வதும் ஆகிய வற்றை இப்போது அவள் மறந்தாள். எப்போதும் ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தாள். எப்போதும் மான்போலத் துள்ளி விளையாடும் தன் மகள் இவ்வாறு இருப்பதை உணர்ந்த தாய்க்கு, ஏன் இப்படி இருக்கிறாள் என்ற ஆராய்ச்சி பிறந்தது. தானாக உய்த்துணர்ந்து கொள்ளலாம் என்று நினைத்தாள்; தன் பெண்ணின் செயல்களை உற்றுக் கவனிக்கலானாள்.

இளநங்கை வரவர மெலிவை அடைந்தாள். இறுக இறுகப் போட்டிருந்த கைவளை நெகிழ்ந்தது. அவளுக்கு விருப்பமான உணவுகளைக் கொடுத்துப் பார்த்தாள் அன்னை. அவள் அவற்றை நாடவில்லை. நல்ல மணமுடைய மலரானால் குழல் நிறையச் சூட்டிக் கொள்ளும் வழக்கம் உடையவள் அந்தப் பெண். இப்போது மலரைக் கண்டாலே அருவருக்கிருள். அயல்வீட்டுப் பெண், எதிர்வீட்டுத் தோழி, அடுத்த தெரு நங்கை ஆகியவர்களுடன் ஓடியும் ஆடியும் கூடியும் குதித்தும் விளையாடுவாள்; இப்போது நோய்வந்தவளைப் போலச் சும்மா உட்கார்ந்திருப்பதும் சோர்ந்து சோர்ந்து படுப்பதுமாக இருந்தாள்.

தாய்க்கு அவளிடம் உண்டான மாறுபாடுகள் தெரிந்தன. ஆனால் காரணம் இன்னதென்று தெரியவில்லை. அவளுக்கு உடல் நோயா? உள்ளநோயா?—தெரிந்துகொள்ள முடியவில்லை.

ஒருநாள் அன்னைக்கு உண்டான கவலை கரையிறந்து சென்றது. 'வளரும் குழந்தை, வாழும் குழந்தை இப்படி இருக்கலாமோ?' என்று அங்கலாய்த்தாள். அவளிடமே கேட்டுவிடுவதென்று தீர்மானித்தாள். அவளை அணுகி மெல்ல அவள் தலையைக் கோதினாள்; உடம்பை வருடினாள். "ஐயோ! உடம்பு எவ்வளவு இளைத்துப் போய்விட்டது! ஏன் அம்மா, இப்படிச் சோர்ந்து சோர்ந்து கிடக்கிருய்? உன் உடம்புக்கு என்ன?" என்று கேட்டாள்.

"என் உடம்புக்கு ஒன்றும் இல்லை."

"அப்படியானால் என் கண் காணுவது பொய்யா? என் கண்தான் சரியாகப் பார்க்கவில்லையென்று வைத்துக் கொண்டாலும் ஊரார் கண்கள் கூடவா பொய் சொல்லும்?"

"ஊராரா? அவர்கள் எங்கே வந்தார்கள்?"

"உன்னைப் பார்க்கிறவர்கள் எல்லோரும் என்னை உன் பெண் ஏன் இப்படி இளைத்திருக்கிருள் என்று கேட்கிருர்கள்.

அவர்களுக்கு விடை சொல்ல முடியாமல் திணறுகிறேன். உனக்கு என்ன நோய் வந்திருக்கிறதென்று எனக்கே தெரியவில்லையே! அவர்களுக்கு நான் என்ன சொல்லப் போகிறேன்?''

''என் உடம்பைப் பற்றி அவர்களுக்கு என்ன கவலை?''

''அவர்களும் உன்னிடம் அன்புடையவர்கள்; அதனால் கேட்கிறார்கள். அவர்கள் கூறுவது கிடக்கட்டும். இப்போது நான் கேட்கிறேன்; எனக்குச் சொல்: ஏன் உன் உடம்பு இப்படி இளைத்துப் போகிறது?''

அந்தப் பெண் அசட்டுச் சிரிப்புச் சிரித்தாள்; ''நீ என் உடம்பை மட்டுந்தானே பார்க்கிறாய்?''

''பின் எதைப் பார்க்கவேண்டும் என்கிறாய்?''

''என்னுடைய மனமும் இளைத்திருப்பதை நீ அறிவாயா?''

''அதென்ன புதுமை?''

''புதுமை ஒன்றும் இல்லை; இயல்புதான். என் உள்ளம் இளைத்தது; அதனால் என் உடலும் இளைத்தது.''

''உள்ளம் ஏன் இளைக்கவேண்டும்?''

''உள்ளத்தில் மயக்கம், மால், உண்டாகி யிருக்கிறது. அது பரவி யிருப்பதால் உள்ளம் இளைத்து வருகிறது.''

''மாலா? அது எப்படி வந்தது?''

''அதை ஒருவன் தந்தான்.''

''ஒருவனா? அவன் யார்?''

''அவன் ஒன்றைத் தந்து ஒன்றை வவ்விக்கொண்டு போனான்.''

''நீ பேசுவது வியப்பினும் வியப்பாக இருக்கிறதே! சற்றே விளக்கமாகச் சொல்.''

"அவன் மால் உலாம் மனம் தந்து என் கையில் சங்கம் வவ்விஞன்."

"மாலுக்கும் சங்கத்துக்கும் பிரிவு இல்லையே! நீ சொல்வது மாருக இருக்கிறதே! மாலைக் கொடுத்துச் சங்கை வவ்வுவதாவது?"

"என் கைவளைகளைச் சொல்கிறேன். என் உள்ளத்தே காம மயக்கத்தை வைத்துவிட்டு என் கைவளையைக் கவர்ந்து கொண்டான்."

"யார் அந்தக் கள்வன்?"

"அவன் என் அளவிலே கள்வனே யன்றி, சிறந்த குடியிற் பிறந்தவனே."

"யார் அவன்?"

"மலைமகளுக்குப் பிள்ளை."

"மலையிலுள்ள மகளென்ருல் குறத்தியா? என்ன சாதி?"

"அவன் பார்வதி குமரன்."

"அவனுக்கு என்ன வேலை?"

"அவன் அரசன்; குடிமன்னன்; மன்ஞதி மன்னன்; சக்கரவர்த்தி."

"எந்த நாட்டுக்குச் சக்கரவர்த்தி?"

"தேவலோகத்துக்கு நாயகன் அவன்; மேலே உள்ள விண்ணில் உலாவும் தேவர் குலம் முழுவதையும் அடிமை யாகக் கொண்டு ஆட்சி செலுத்தும் மன்னன் அவன்."

"அவன் வயசு?"

"அவன் கட்டிளங்காளை; குமரவேள்."

"இன்னும் திருமணம் ஆகவில்லையோ?"

"அவனுக்கு இரு மனைவியர் உண்டு. அந்த இருவருக்குள் உலகமெல்லாம் அறிந்த பெருமையை உடையவள் வள்ளி."

"அவனு உன் உள்ளத்தில் காதலை உண்டாக்கினவன்?"

"ஆம்; அவன்தான் என் காதலன்."

"அடி பைத்தியக்காரப் பெண்ணே! நாம் இங்கே மருத நிலத்திலே வாழ்கிறவர்கள். யாரோ மலைமகள் மதலையாம்; தேவலோகத்து அரசனும்; தெய்வப் பெண்ணையல்லவா அவன் மணம் புரிந்துகொண்டிருப்பான்?"

"இல்லை; இல்லை. அவன் இந்த உலகத்திலே பிறந்து வளர்ந்த மானிடப் பெண்ணுகிய வள்ளியை மணந்தவன்; வள்ளிதன் மணுளன்."

"அவனை நீ எப்படிக் கண்டாய்? தேவலோக மன்னனுகிய அவன் உன் கைச் சங்கம் வவ்விஞன் என்ருயே; அது எப்படி நிகழ்ந்தது?"

"அவன் !தேவர் குலமுழுதாளும் மன்னன் ஆனுலும் உலகம் யாவுமே அவன் அருளாட்சியினுல் இயங்குகிறது. அவனுக்கு இந்த உலத்திலும் பல அரண்மனைகள் உண்டு."

"அரண்மனைகளா? நான் கண்டதில்லையே!"

"திருவிடைக்கழியில் ஓர் அரண்மனை இருக்கிறது."

"இதோ பக்கத்தில் இருக்கிறதே; இந்தத் திருவிடைக் கழியிலா?"

"ஆமாம்; சேல் மீன்கள் உலாவும் கழனிகளோடு விளங்கும் நிலவளம் மிக்க இதே திருவிடைக்கழிதான்."

"அங்கே அரண்மனை ஏதும் இருப்பதாகத் தெரிய வில்லையே?"

"கோயிலும் அரண்மனைதானே? கோ என்பது அரசனுக்குப் பெயர்; அவன் இருக்கும் இல் அரண்மனை அல்லவா?"

"அந்தக் கோயிலிலா அவன் இருக்கிருன்?"

"ஆம்; அங்கே ஒரு குரா மரம் இருக்கிறது. அதன் குளிர்ந்த நிழலில் அவன் எழுந்தருளியிருக்கிறான்."

"அவனுடைய அங்க அடையாளங்களைத் தெரிந்து கொண்டாயா?"

"நன்றாகத் தெரிந்துகொண்டிருக்கிறேன். அவன் தன் திருக்கரத்தில் வேற் படையை ஏந்தியிருக்கிறான். அதனால் அவனை வேலன் என்றும் சொல்வதுண்டு. செக்கச் செவே லென்று இருப்பான். உலகத்தில் சில மக்களைச் சிவப்பாக இருக்கிறார்கள் என்று சொல்வது வெறும் உபசாரம். உண்மையாகவே சிறந்த செந்நிறம் படைத்தவன் என் சேந்தன்."

"உன் சேந்தனா?"

"ஆம்; சேந்தன் என்றாலே சிவந்த வண்ணமுடையவன் என்று பொருள். அவன் என் மனத்திலும் கோயில் கொண்டான். ஆகையால் எனக்கு உறவினனாகிவிட்டான். மால் உலாம் மனந்தந்த அவனை என் சேந்தன் என்று சொல்வதில் தவறு என்ன?"

இவ்வாறு தன் மகளோடு உரையாடிய தாய் அவள் வாயிலாக எல்லாவற்றையும் உணர்ந்துகொண்டாள். தேவ லோக நாயகனான முருகன்மேல் காதல் கொண்டிருக்கிறாள் என்று உணர்ந்து வியப்பில் மூழ்கினாள். அயல் வீட்டில் இன்னார் இருக்கிறார்கள் என்று கூடத் தெரிந்து கொள்ளாத பேதை அவள். மிகவும் மென்மை யான உடலும் மென்மையான உள்ளமும் படைத்தவள். அவள் இப்படித் தேவர்குல முழுதாளும் குமரவேளைக் கண்டு அவன்பால் காதல் கொண்டாள் என்பதை எண்ண எண்ணத் தாய்க்கு வியப்பு மேன்மேலும் ஓங்கியது.

அந்த அன்னையின் தோழி ஒருத்தி, "உன் மகள் என்ன, ஒரு மாதிரியாக இருக்கிறாளே!" என்று கேட்டாள். உடனே

அவள் தன் மகளிடம் அறிந்தவற்றை யெல்லாம் தொகுத்துச் சொல்லலானாள்:

"மால்உலாம் மனம்தந் தென்கையில் சங்கம்
வவ்வினான், மலைமகள் மதலை;
மேல்உலாம் தேவர் குலம்முழு தாளும்
குமரவேள், வள்ளிதன் மணாளன்,
சேல்உலாம் கழனித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
வேல்உலாம் தடக்கை வேந்தன்,என் சேந்தன்"
என்னும்என் மெல்லியல் இவளே!

[மால் - காதல். சங்கம் - வளை. மதலை - பிள்ளை. குரா - ஒரு வகை மரம். சேந்தன் - முருகன்; செந்நிறம் உடைமையால் இப் பெயர் வந்தது. மெல்லியல் - மென்மையான இயல்பை உடையவள். நற்றாய் தன் மகள் நிலையைச் சொல்லியது.]

ஒன்பதாம் திருமுறையாகிய திருவிசைப்பாவில் சேந்தனார் பாடிய பதிகங்களில் ஒன்று முருகனைப் பற்றிக் கூறுவது. அதில் உள்ள முதல் பாட்டு இது.

# எழில் கவர் கள்வன்

தன் மகள் கொண்ட மால் உறுதியாக இருப்பதை உணர்ந்தாள் தாய். அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அந்தச் சேந்தனைத் தானும் ஒரு முறை போய்ப் பார்த்து வரலாம் என்ற எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. ஒரு நாள் திருவிடைக்கழிக்குப் போனாள்.

அன்றும் முருகன் திருவுலா வந்துகொண்டிருந்தான். கூட்டமான கூட்டம்! எவ்வளவு கூட்டமாக இருந்தால் என்ன? அவனை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவன் யானையின் மேல் அன்று பவனி வந்தான். யானை மிகப் பெரியது. அதைப் பார்த்து அயர்ந்து போய்விட்டாள். 'இந்த யானைக்குக் கவளம் கொடுத்துக் காப்பாற்றப் பெரிய மன்னனாகத்தான் இருக்கவேண்டும்' என்று வியந்தாள். அந்தக் கவளமா கரியின்மேல் முருகன் எழுந்தருளியபோது இருமருங்கும் அரம்பையர் கவரிகளை இரட்டினர். மேலே குடை நிழற்றியது. யானைமேல் அம்பாரி வைத்து அதன் மேல் வீற்றிருந்தான் அவன். யானை அசைந்து அசைந்து வந்தது. அதன் முகத்திலே முகபடாம் பளபளத்தது. இரு மருங்கும் மணி ஒலித்தது. எங்கே பார்த்தாலும் கண்ணைப் பறிக்கும் பொன்னும் மணியும்.

இந்த ஒளி வெள்ளத்துக்கு நடுவிலே முருகனுடைய கோலம் ஒளிப் பிழம்பாகத் திகழ்ந்தது. அவன் பொன் மலைபோலக் கம்பீரமாக யானையின்மேல் வீற்றிருந்தான்.

யானை ஒரு மலைபோல இருந்தது; அதற்கு மேல் கனகக் குன்று போல அவன் காட்சி அளித்தான். சிறிது நேரம் அவள் எல்லாவற்றையும் மறந்து அவனுடைய திருக்

கோலத்தைக் கண்டபடியே நின்ருள். பிறகு தன் நினைவு பெற்ருள். தன் மகளுடைய நினைவும் வந்தது. 'அவளுடைய உள்ளத்தையும் எழிலையும் கவர்ந்து கொண்ட கள்வன் அல்லவா இவன்?' என்று தொடர்ந்து நினைவு கூர்ந்தாள். சிறிதே அவள் மனம் அவள் வீட்டுக்குச் சென்றது. தன் பெண்ணை அகக் கண்ணிலே கண்டாள்.

கச்சினை யணிந்து தன் பருவ எழில் பொங்க விளங்கினவள் அவளுடைய மகளாகிய இளநங்கை; வளரும் வாழை போலத் தளதளவென்றிருந்தவள். இப்போதோ அந்த உடல் வளம் குறைந்தது. அழகுப் பொலிவே குறைந்து விட்டது போலத் தோன்றியது. வார் இளமென் கொங்கையில் பசலை அடர்ந்தது. காதலால் பற்றப்பட்டவர்கள் தம் காதலரைப் பிரிந்து வாடும்போது அவர்கள் உடம்பில் பசலை தோன்றும். அது பீர்க்கம் பூப்போலப் பொன்னிறமாக இருப்பது; தேமலைப் போல்வது. பீர் என்பது பீர்க்குக்கு ஒரு பெயர்; பீர்க்கம் பூப்போல இருப்பதனல் பசலையைப் பீர் என்று சொல்லுவார்கள்.

உடம்பெலாம் எழில் பொங்க இளமென் கொங்கையொடு நின்ற நங்கைக்கு இப்போது பீர் பொங்குகிறது. அதற்குக் காரணம் இளங்காளையாகிய முருகன் அவள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டதுதான்; அவள் எழிலையும் கொள்ளை கொண்டான்.

தன் மகள் நிலையை எண்ணியபோது தாய்க்குச் சற்றே வருத்தம் வந்தது. எதிரே யானையின்மேல் உலா வந்தவன் தன் மகளுக்கு ஏற்ற பருவத்தினன்தான்; இளங்காளை, ஆனல் அவன் நிலை எத்தனை உயர்ந்தது! கவளமா கரிமேல் கவரிசூழ் குடைக்கீழ்க் கனகக் குன்று என்று சொல்லும்படி அல்லவா வருகிருன் அவன்? இத்தனை பெருமை உடையவனக இருந்தாலும் யாரும் அறியாமல் ஓர் இளம் பெண்ணின்

எழிலைக் கவர்ந்து விட்டானே! அவனைக் கள்வன் என்று சொல்வதில் தவறு என்ன?

பவனி வந்த முருகன் தன் திருக்கோயிலை அடைந்தான். தாய் அந்த ஊரைச் சுற்றிப் பார்த்தாள். அவனுடைய பெருமைக்கு ஏற்ற நகரமாக விளங்கியது அது. மாட மாளிகைகளும் கூட கோபுரங்களும் வீதிதோறும் விளங்கின. ஊர் சிறப்புறுவது மாளிகைகளால் அல்லவா? அந்த ஊர் நன்கு திவளும்படியாக (விளங்கும்படி) அவை நின்றன. அந்த மாளிகைகளுக்கு நடுவே முருகனுடைய திருமாளிகை இருந்தது.

திருவிடைக்கழியின் சிறப்பை அறிந்து முருகன் திருமாளிகையாகிய திருக்கோயிலுக் குள்ளும் சென்றாள். அங்குள்ள அழகிய குராமரத்தின்கீழ் அந்தக் குமரன் நின்று கொண்டிருந்தான். அவன் மட்டுமா நின்றான்? அருகில் பேரழகி ஒருத்தியும் நின்றுகொண்டிருந்தாள். அவள்தான் வள்ளி; அவளை உற்று நோக்கினாள்.

'இவன் பேரழகன்: இவளும் இவனுக்கு ஏற்ற பேரழகி; இவள் என்ன, எப்போதும் இவனைத் தன் கண்ணின்மணியைப் போல வைத்துப் பாதுகாக்கிறாளோ? எப்போதும் இவனையே பார்த்துக்கொண்டிருக்கிறாளே! அழகுக் கண்ணால் இவள் பார்க்கிற பார்வையே இனிமையாக இருக்கிறது. நீலமலர் போன்ற கண்ணை இவன் பக்கலில் வீசுகிறாள். இவள் இவனையே நயந்து காதல் செய்து அடைந்தவள் போலும்! இந்தக் குவளைமா மலர்க்கண் நங்கை நயப்பதில் வியப்பு என்ன? இவன் கட்டிளமையும் பேரழகும் கண்டால் யார்தாம் நயக்கமாட்டார்கள்? இளங்காளை, குழகன், அழகன் என்று சொல்லிச் சொல்லி மகிழலாமே. இவனைப்போல அழகர் யார் இருக்கிறார்கள்? மன்னாதி மன்னன், கோ, அழகிய அரசன், அம் கோ இவன்."

இப்படி அவள் வியந்தபடியே நின்றாள். தன் மகளை மறந்து வியந்தாள்; குழகனென்றும் அழகனென்றும்

கோவென்றும் புகழ்ந்தாள். இடையிலே மகள் நினைவு வந்தால், அவள் பீர் பொங்க எழிலிழந்து நிற்கும் நிலை தோன்றினல், காளையென்றும் கள்வனென்றும் கூறினுள்.

யானையைக் கண்டால் மலைப்பு, அதன்மேல் முருகனைக் கண்டால் பிரமிப்பு. ஊரில் உள்ள மாளிகையைக் கண்டால் வியப்பு. அவன் அருகில் உள்ள வள்ளியைக் கண்டால் இறும்பூது. இப்படி ஒரே ஆச்சரிய உருவமாக நின்றுள் தாய்.

கடைசியில் தன் ஊர் போய்ச் சேர்ந்தாள். சேர்ந்த அன்றே அவளுடைய தோழி வந்தாள். அவளுடைய மகளைப் பார்த்தாள். அவள் உடம்பு மெலிந்திருந்ததைக் கண்டு, "என்னடி இது? எப்படி இருந்தவள் எப்படி ஆகி விட்டாள்!" என்று தாயைக் கேட்டாள்.

தாய், அவள் நிலைக்குக் காரணத்தைச் சொல்லத் தொடங்கி, அவள் எழில் கவர்ந்த காளை பவனி வந்ததையும், அவன் இருக்கும் ஊரையும், அவன் திருக்கோயிலையும், அவனை நயக்கும் மங்கையையும் பற்றி விரித்து உரைத்தாள்.

அவள் கூறும் கூற்றாக உள்ளது பாட்டு.

இவளைவார் இளமென் கொங்கைபீர் பொங்க
எழில்கவர்ந் தான்இளங் காளை,
கவளமா கரிமேல் கவரிசூழ் குடைக்கீழ்க்
கனகக்குன் றெனவரும் கள்வன்,
திவளமா ளிகைசூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
குவளைமா மலர்க்கண் நங்கையாள் நயக்கும்
குழகன்,நல் அழகன்அம் கோவே.

[வார் - கச்சு. பீர் - பசலை. இவளை எழில் கவர்ந்தான். திவள ஊர் விளங்க. குழகன் - இளையவன்.]

திருவிடைக்கழியை அருணகிரிநாதர் பாடி யிருக்கிறுர்.

இந்தப்பாடல் சேந்தனுர் திருவிசைப்பாவில் திருவிடைக் கழிப் பதிகத்தில் உள்ள இரண்டாவது பாட்டு.

# மேகலை கவர்பவன்

திருவிடைக்கழி முருகனிடம் காதல் கொண்ட இள நங்கையின் நிலை பார்க்கப் பார்க்க இரங்கத் தக்கதாக ஆகிவிட்டது. எல்லாரையும் போலச் சிரித்து விளையாட வேண்டும் என்று அவள் முயன்றாலும் அவளால் முடியவில்லை. அவள் உடம்பே அவள் வசம் இருக்கவில்லை. காலை எடுத்து வைத்து நடந்தால் அது எங்கேயோ போகிறது. முதல் எட்டு எடுத்து வைத்தால் அடுத்த எட்டு அதைத் தொடரவேண்டாமோ? அந்தக் கால் தொடர்வதில்லை. அப்போது அந்த இளநங்கை தடுமாறுவதைப் பார்த்தால் ஒரு பக்கம் சிரிப்பு வருகிறது; மற்றொரு பக்கம் இரக்கம் உண்டாகிறது.

இன்று எப்படியாவது வீட்டு வேலைகளைக் கவனிக்க வேண்டும் என்று துணிந்தாள் அவள். அவளுக்கு வீட்டு வேலை செய்யக் கூடாது என்ற எண்ணமா? அப்படி ஏதும் இல்லை. அவள் உள்ளம் அவளிடம் இருந்தால்தானே, இதை இப்படிச் செய்ய வேண்டும் என்று சிந்தித்து நின்று நிதானித்துச் செய்ய முடியும்? அதைத்தான் திருவிடைக்கழி முருகன் பறித்துக்கொண்டானே!

அவள் வெளியே சென்று நீர் கொண்டு வரலாம் என்று இடுப்பிலே குடத்தை எடுத்துக்கொண்டு போனாள். அவள் தாய் அவள் நிலையை நன்கு உணர்ந்திருந்தாள். எப்போதும் வாட்டத்துடன் உட்கார்ந்திருப்பதை விட, இப்படி ஏதாவது வேலையில் ஈடுபட்டால் கொஞ்சம் சுறுசுறுப்பு வரலாம், அந்த வாட்டம் ஒழியலாம் என்பது அவள் எண்ணம்.

குடத்துடன் குளத்துக்குப் போனாள். நீர் நிரப்பினாள். எடுத்துக்கொண்டு வந்தாள். அவள் உடல் முன்னையினும்

மிகவும் இளைத்துவிட்டது. நடக்கும்போது அந்த மெலிவு நன்ருகத் தெரிகிறது. அதை ஊரார்கள் கவனிக்கிருர்கள்; ஏதேதோ பேசுகிருர்கள். அவள் காதில் அவை விழுந்தால்தானே? அவள் உள்ளந்தான் திருவிடைக்கழியில் இருக்கிறதே! தான் போகும் வழியின் இருமருங்கும் உள்ள வர்களை அவள் பார்க்கவில்லை. அவள் சிந்தனையோடு நடந்தாள்.

அப்போது அவள் இடையில் அணிந்த மேகலை எங்கோ நழுவிவிட்டது. அதை அவள் உணரவில்லை. எப்போதோ நழுவி விழுந்திருக்க வேண்டும். முன்பெல்லாம் இப்படித் தளர்ந்து நடந்து வரவில்லை. இன்று நடந்தாள். அது உடம்பு மெலிவிஞல் நழுவி விழுந்தது.

வீட்டுக்கு வந்து சேர்ந்தாள் நங்கை. அவள் தாய் அவளை ஆவலோடு எதிர்பார்த்துக்கொண்டு நின்ருள். அவளைக் கண்டதும் மேலும் கீழும் பார்த்தாள். மேகலையைக் காண வில்லை.

"எங்கே, இடையில் மேகலையைக் காணவில்லையே!" என்ருள் அன்னை.

அப்போதுதான் அந்த நங்கை அதை உணர்ந்தாள். வழி யிலே எங்கேயோ நழுவி யிருக்க வேண்டும் என்று எண்ணிஞள். அதற்குள் அவள் தாய் ஆளைவிட்டுத் தேடச் செய்தாள். மேகலையை இழந்து மெலிந்த நங்கை மீட்டும் வாட்ட முற்றவளாய் உட்கார்ந்தாள்.

அந்தச் சமயம் பார்த்து அவள் அன்னையின் தோழி அங்கே வந்து சேர்ந்தாள். சிறிய ஊரில் ஒரு வீட்டில் எது நிகழ்ந்தாலும் ஊர் முழுவதும் ஒரு கணத்தில் பரவி விடும். மேகலை கெட்டுப்போன துக்கத்தை விசாரிக்க வந் திருந்தாள் அந்தப் பெண்மணி!

"உன் பெண்ணின் மேகலையைக் காணேம் என்ருர் களே!"

அதைக் கேட்ட தாய்க்குக் கோபமும் துயரமும் கலந்து பொங்கின. தன் மகளுக்கு இந்த நிலை வருவதற்குக் காரணமான குமரன்மேல் கோபம் வந்தது. இப்படி நாலு பேர் கேட்கும்படி வந்துவிட்டதே என்று துக்கம் மூண்டது.

தோழி கேட்ட கேள்விக்கு அவள் ஆத்திரத்தோடு விடை கூறினாள். "ஆம்; அது திருட்டுப் போயிற்று!"

"என்ன, திருட்டுப் போயிற்று? திருடினவனைக் கண்டு பிடிக்கவில்லையா?"

"திருடினவன் இன்னான் என்று தெரியும்."

"தெரியுமா? தெரிந்துமா சும்மா இருக்கிறாய்?"

"என்ன செய்யச் சொல்லுகிறாய்?"

"திருடனை என்ன செய்வது? தண்டித்துக் களவுபோன உடைமையை மீட்டும் பெறுவது."

"அந்தத் திருடனைத் தண்டிப்பது நீ சொல்வது போல அத்தனை எளிதன்று."

"அந்தத் திருடன் இன்னும் பல இடங்களில் திருடிப் பழக்கமானவனோ?"

"இல்லை; இல்லை. அவனைச் சுற்றி இவளைப்போல எத்தனையோ பெண்கள் இருக்கிறார்கள். அவ்வளவு பேரும் நிறைய ஆபரணங்களை அணிந்திருப்பவர்கள். சிறந்த வேலைப் பாடுகளையுடைய பவளத்தாலாகிய அணிகளையும் வேறு அணிகலன்களையும் அணிந்திருப்பார்கள். இளைய பெண்கள். அவர்களைப் பார்த்தால் கல்யாணப் பெண்களைப் போலவே காட்சி அளிப்பார்கள்."

"அவ்வளவு பேரிடமும் அவன் ஒழுங்காக நடந்துகொள்கிறானா?"

"அவர்கள் எல்லாம் அவனைச் சூழ்ந்துகொண்டு இருப்பார்கள். அவர்கள் நகைகளில் ஒன்றுகூடக் களவு போவதில்லை."

கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள் சூழ்.

[சிறந்த வேலைப்பாடுகளையுடைய பவள அணிகளையும் இளமையையும் மணக் கோலத்தையும் உடைய பெண்களின் கூட்டங்கள் சுற்றியிருக்கும். கோ - மேன்மை, சிறப்பு. பவளம்: ஆகுபெயர்; அதனால் ஆன அணிகளுக்கு ஆயிற்று. குழ - இளமை.]

"அவனுக்கு அடையாளம் ஏதாவது உண்டா?"

"எல்லாரும் எளிதில் காணும் அடையாளம் இருக்கிறது."

"என்ன அது?"

"கோழியை வெற்றிக்கு அறிகுறியான கொடியாகப் பிடித்துக்கொண்டிருப்பான். நெடுந்தூரத்தில் அவன் வரும் போதே அவனுடைய கொடி, இன்னான் வருகிறான் என்பதைப் புலப்படுத்தும்."

கோழி வெல் கொடியோன்.

"இத்கையவன் எப்படித் திருட்டுத் தொழிலை மேற்கொண்டான்?"

"அவனுக்குத் தொழில் திருடுவது அன்று; காவல் காப்பதுவே தொழில்."

"நீ சொல்வது வேடிக்கையாக அல்லவா இருக்கிறது? வேலியே பயிரை மேயலாமா என்று பழமொழி சொல்வார்க்ள். நீ சொல்வதைப் பார்த்தால் அப்படியும் ஒரு முரணான செய்கை இருக்கிறதென்று தெரிகிறதே! அவன் காவல் தொழிலிலுள்ளவன் என்று எப்படித் தெரியும்?"

"உலகில் யாவரும் அறிவர். என்னுடைய காவலுக்கு உட்படுவது சிறந்த சேனையாகிய அமரர் படை என்று சொல்லி அதைக் காப்பவன். அதனால் அவனுக்குத் தேவ சேனாபதி என்ற பெயரும் அமைந்திருக்கிறது."

**காவல்நற் சேனை என்னக் காப்பவன்.**

[நற்சேனை - நல்ல சேனையாகிய அமரர் படை.]

"அவன் அணிகலன்களை அணிந்த பெண்கள் சூழ இருப்பவன் என்கிறாய்; இவன் மேகலையைக் கவர்ந்தான் என்கிறாய். அவன் காவல் தொழில் பூண்டவன் என்கிறாய்; இங்கே களவுத்தொழில் செய்தான் என்கிறாய். முரணான செய்திகளாக இருக்கின்றனவே!"

"ஆம்; அவனைப்பற்றி நான் கேள்வியுற்றதும் இப்போது நிகழ்வதும் ஒன்றுக்கொன்று விரோதந்தான்."

"அவனுடைய இயற்பெயர் என்ன?"

"சுப்பிரமணியன்."

"அவன் ஊர்?"

"திருவிடைக்கழி."

"அவன் அந்தஸ்து?"

"தேவர்களுக்கெல்லாம் தலைவன். மயிலின்மேல் ஊர்ந்து வருபவன்."

"என்னவோ அம்மா, நீ சொல்வது வரவரப் புரியவில்லை. ஒரே குழப்பமாக இருக்கிறது; அணிகலன்களை அணிந்த பெண்கள் விரும்பிச் சூழ நிற்பவன், தேவர் படையைக் காப்பவன், தேவருக்குத் தலைவன் இப்படிச் செய்கிறான் என்றால் நம்பவே முடியவில்லை."

"பிறருக்கெல்லாம் அவன் அப்படி இருந்தால் என் பொன்னான மகளளவில் அவளுடைய மேகலையைக் கவர்கிறவனாக இருக்கிறான். இந்த உண்மையை மறைப்பதில் பயன் இல்லை."

தாய் சொல்வதையே பின் வரும் பாடல் சொல்கிறது.

கோவினைப் பவளக் குழமணக் கோலக்
குழாங்கள்சூழ் கோழிவெல் கொடியோன்,
காவல் நற் சேனை என்னக்காப் பவன்என்
பொன்னைமே கலைகவர் வானே!
தேவின் நற் றலைவன் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தூவி நற் பீலி மாமயில் ஊரும்
சுப்பிர மண்ணியன் தானே.

[சிறந்த வேலைப்பாட்டை உடைய பவளத்தாற் செய்த அணிகளை யுடைய இளைய மணக் கோலத்தை யுடைய பெண்களின் கூட்டங்கள் சூழும், கோழியாகிய வெல்லும் கொடியை உடையவன், தன் காவலுக்குட்படுவது அமரர்தம் நல்ல சேனை என்று காப்பவன், தேவர்களின் நல்ல தலைவன், திருவிடைக்கழியில் அழகிய குராமரத்தின் நிழலில் நின்ற, மெல்லிய இறகையும் அழகிய பீலியையும் உடைய பெரிய மயில் மேல் ஊர்ந்து வரும் சுப்பிர மணியன், என் திருமகள் போன்ற மகளினிடமிருந்து மேகலையைக் கவர்வான்.

கோ - சிறப்பு. பொன் - திருமகளைப் போன்றவள். பொன்னை - பொன்னிடமிருந்து; உருபுமயக்கம் தேவு - தேவர்கள். தூவி - மெல்லிய இறகு. பீலி - மயிலின் சிறகில் கண்போலத் தோன்றும் பிஞ்சம். ஊரும் - ஏறிவரும். சுப்பிரமணியன் என்பது சுப்பிர மண்ணியன் என விரிந்தது; செய்யுள்விகாரம்.]

இது சேந்தனார் பாடிய பதிகத்தின் மூன்றாவது பாட்டு.

# இடர் பயப்பது குணமா?

தன்னுடைய மகள் முருகனிடம் வைத்த காதலால் வாடுகிறாள் என்று ஒவ்வொரு நாளும் வருந்தினாள் தாய். தன் மகள் கொண்ட காதல் தகாததென்று அவள் எண்ண வில்லை. தேவயானை அமரர்கோன் மகள். வள்ளி மானிட மகள்தானே? அவளை ஆட்கொண்ட முருகன் தன் மகளையும் ஏற்றுக்கொள்ள இடம் உண்டு என்ற நம்பிக்கை அவளுக்கு எழுந்தது. வந்தவர்களிடம் அவளைப்பற்றிக் குறை கூறிக் கொண்டிருப்பதில் பயன் ஒன்றும் இல்லை. உள்ளத்தை ஒரு வழியே போக்கின தன் மகளை, அந்த ஆசையை விட்டுவிடு என்று சொல்லலாமா? அவளுடைய மகள் நினைத்தபடி யெல்லாம் மனத்தை அலையவிடுபவள் அல்லவே.

தளதளவென்று அரும்பும் மலரும் கொண்டு நின்ற கொடி போலப் பருவ எழில் நிறைந்து துளும்ப இலங்கின அந்த மங்கை இன்று வாடிய கொடிபோல அல்லவா கிடக்கிறாள்? இதற்குப் பரிகாரம் ஒன்றும் இல்லையா?

சாட்சிக்காரன் காலில் விழுவதைவிடச் சண்டைக்காரன் காலில் விழுவது நல்லது என்பார்கள். யார் யாரிடமோ சொல்லிக் குறை கூறுவதைவிட முருகனிடமே சென்று முறையிடலாம் அல்லவா? தாயே அப்படிச் செய்வது தக்கதன்று.

அப்போது அவளுக்கு ஓர் உண்மை புலனாயிற்று. உலகத்தில் உள்ள மக்களாக இருந்தால்தானே நேரே போய்ச் செவ்வி பார்த்துச் சொல்லவேண்டும்? முருகன் எங்கும் நிறைந்தவன். எங்கும் செவியுடையவன். மனத்திலே எண்ணினால்—அன்புடன் உருகி எண்ணினால்—அந்த எண்ணத்தை அவன் உணர்ந்து கொள்வான். இப்போது

தனியே இருந்து, மனம் உருகி, தன் மகளுக்கு அருள் புரிய வேண்டுமென்று வேண்டிக்கொள்ளலாமா? வேண்டுவார் வேண்டுவதே ஈவான் அவன் என்று அவனைத் தெரிந்தவர்களெல்லாம் சொல்லுகிறார்களே!

அவள் முருகனை நினைந்து வழிபட்டாள். அவனை நேரே விளித்துச் சொல்ல நாணமாக இருந்தது. யாரேனும் மதிப்புக்குரியவர் ஒரு தவறு செய்தால் அவரை நேர்முகமாக வைத்து, "நீங்கள் இப்படிச் செய்வது நியாயமா?" என்று கேட்பது வழக்கம் அன்று. "இவ்வளவு பெரியவர், குணம் நிறைந்தவர் இவ்வாறு செய்யலாமா?" என்று கேட்பது மரபு. இந்த அன்னையும் அவ்வாறே முருகனைப் படர்க்கையில் வைத்து முறையிடத் தொடங்கினாள். இரக்கமற்ற செல்வர்கள், யாரேனும் தம் முன்னிலையில் நின்று எவ்வளவு உரக்க அரற்றினாலும் ஏனென்று கேட்க மாட்டார்கள். ஆனால் முருகனோ எப்படிச் சொன்னாலும் கேட்கும் ஆற்றலுள்ளவன்; பார்க்கும் இடம் எங்கும் ஒரு நீக்கமற நிறைந்துள்ள பரமன். அவள் சிந்தையினால் முருகனை எண்ணி முறையிடலானாள்.

முருகன் பிறரால் வரும் இடையூறுகளை அன்பர்களுக்கு நீக்கி இன்ப வாழ்க்கை அருள்பவன். பேராற்றல் உடையவர்களுக்கும் சில சமயங்களில் இடையூறுகள் வரும்; அவை பிறரால் போக்குவதற்கு அரியவை. அவற்றையும் தீர்த்து அருள்பவன் முருகன். அவன் இந்தப் பெண்ணுக்கு இடரை உண்டாக்குவது பண்பாகுமா?

அன்று வானவர்களுக்கு இடுக்கண் வந்தது. ஆயிரத்தெட்டுக் கோடி அண்டங்களைத் தன் கொடுங்கோலாட்சிக்குள் அடக்கி ஆண்டான் சூரபன்மன். அசுரர்கள் அறுபத்தாறு கோடி பேர்கள். தேவர்களோ முப்பத்து மூன்று கோடி. தேவர்கள் மடிவதையன்றி வேறு வழி இல்லை. கிரௌஞ்சாசுரன் திடீர் திடீரென்று எழும்பி வந்து எங்கேயாவது படிந்து

அமரரை நாசம் செய்தான். இந்த அக்கிரமத்தைப் போக்க இந்திரனால் இயலவில்லை; வானவர் சேனையால் இயலவில்லை. எல்லாத் தேவர்களும் கூடிச் சிவபெருமானிடம் முறையிட்டார்கள். முருகன் தோன்றினான். வானவர் தாமே அசுரர்மேல் படையெடுத்துச் சென்றால் அடியோடு அழிந்து விடுவார்கள். முன்பே சிலர் மடிந்து போனார்கள். அதை அறிந்து முருகன் தேவர்படைக்குத் தானே தலைவனானான். தானே போர்க்களத்தில் நின்று அமர் பொருதான். முருகனுக்கும் சூரனுக்கும் நேரே பகை ஒன்றும் இல்லை. அமரர்கள் மடிய, அது கண்டு கருணையினால் தானே போர்க்களத்தில் குதித்துப் போர் செய்தான். பேராற்றலும் பெரு வீரமும் உடைய முருகன் சூரன் மார்பினைப் பிளந்தான். இத்தகைய பெருவீரன், பெரியவர்களின் இன்னலைப் போக்குவதே தன் கடமையாகக் கொண்ட கருணையாளன், என் மகளுக்கு இடர் பயப்பது குணமாகுமா?

**தான்அமர் பொருது, வானவர் சேனை**
**மடியச் சூர் மார்பினைத் தடிந்தான்.**

[வானவர் சேனை மடிய, அதுகண்டு தானே முன்சென்று வானவர்களோடு அமர் பொருது, சூரனுடைய மார்பைப் பிளந்தான்.]

அவனுடைய தந்தை பெரிய வள்ளல். தாருகா வனத்து முனிவர்கள் ஒரு யாகம் செய்து அதிலிருந்து ஒரு மானை உண்டாக்கி அவர்மேலே பாய அனுப்பினார்கள். அவர் மானைக் கண்டு இரங்கினார். தம்மேலே மோத வருகிறதே என்று அஞ்சவில்லை. குழந்தை காலால் உதைக்கிறதென்று தந்தை அஞ்சுவாரா? சிவபெருமான் அந்த மானை எளிதிலே பிடித்துக் கையிலே ஏந்திக் கொண்டார். தம்மைப் பகைத்தவர்களுக்கும் அருள் தரும் கருணை வள்ளல் அவர். அவருடைய பிள்ளை அல்லவா முருகன்? தந்தையின் பண்பை வளர்ப்பது தானே புதல்வனது கடமை? அப்படி இருக்க, அவன் என் மகளுக்குத் துன்பம் உண்டாகும்படி செய்வது பண்பாகுமா?

**மான் அமர் தடக்கை வள்ளல்தன் பிள்ளை.**

[அமர்-தங்கும். தடக்கை-பரந்த கை.]

முருகன் அன்று தேவர்களின் இடரைத் தீர்த்து இந்திரனுக்கு மீண்டும் வானுலக அரசாட்சியை வழங்கினான். அவனுடைய இராசதானி கந்தலோகம். சூரனுடைய சங்காரத்தோடு அவனுடைய கடமை முடிந்துவிடவில்லை. அப்போதுதான் தொடங்கியது. உலகில் உள்ளவர்கள் நன்கு வாழவேண்டும். அறவாழ்வினால்தான் இன்பம் உண்டாகும். அறம் வளர்ந்தால் பாவம் தேயும். மறவாழ்விலே ஈடுபடுவர்கள் அசுர இயல்பு உடையவர்கள்; அறநெறியிலே செல்பவர்கள் தேவ இயல்பு உடையவர்கள். வையத்தில் வாழ்வாங்கு வாழ்பவர்கள் வான் உறையும் தேவர்களோடு ஒப்ப எண்ணுதற்குரியவர்கள் அல்லவா? அறத்துக்கும் மறத்துக்கும் உலகில் ஒவ்வொரு நாளும் போர் நடந்துகொண்டே இருக்கிறது. அறத்தை வேதம் கூறுகிறது. அது பெரிய அறநூல். அறத்தை உணராமல் மனிதனை மனிதன் வெறுத்து அடித்துத் துன்புறுத்துகிறான். குடும்பத்தைக் குடும்பம் பகைத்துக் கலாம் விளைக்கிறது. நாட்டை நாடு மோதி உலக வாழ்வையே குலைக்கிறது. உலகெல்லாம் மறத்தின் கொடுமை மிகுதியாக இருக்கிறது. உண்மையான, நிலைபெற்ற, சத்தான அறம் வளர வேண்டுமானால் இறைவன் திருவருள் துணை இருந்தால் முடியும்.

குற்றவாளிகள் மலிந்துள்ள இடங்களில் பல போலீஸ் ஸ்டேஷன்களை அமைப்பது ஆட்சியாளர் இயல்பு. அதுபோல அறம் வளர வேண்டுமானால் மறத்தைத் தொலைக்க முருகன் கந்த லோகத்தை மாத்திரம் இராசதானியாகக் கொண்டு வீற்றிருந்தால் போதாது. பல இடங்களில் அறங்காவல் நிலையங்களை அமைத்துக்கொள்ள வேண்டும்.

இந்த அவசியத்தை அறிந்து முருகன் பல நிலையங்களை அமைத்துக்கொண்டிருக்கிறான். நிலவுலகத்தில் அவன் மறத்

தோடு போரிட்டு அறநெறியையும் அருளின்பத்தையும் வளர்ப்பதற்காகவே ஆறுபடை வீடுகளில் அமர்ந்திருக்கிறான். அவை பெரிய காவல் நிலையங்கள். அன்றியும் வேறுபல அழகிய இடங்களிலும் அவன் எழுந்தருளியிருக்கிறான். அவற்றில் ஒன்றுதான் திருவிடைக்கழி.

என்ன அழகான நிலையம் அது! வண்டுகள் விரும்பிச் சென்று இசை பாடும்வண்ணம் நிறைய மலரையுடைய பொழிலைப் பெற்றது அந்த நகரம். அங்கே வளமும் அழகும் நிரம்பிய குராமரத்தின் நிழலில் அவன் நிலைபெற்றிருக்கிறான். அவ்வாறு நின்ற கோன், எதற்காக இப்படியெல்லாம் வந் திருக்கிறான் என்பது நினைப்பதற்குரியது. பூம்பொழிலின் வளத்தைக் காண அன்று; மங்கையரை மயல் பூட்ட அன்று; புதிய இடத்தைப் பிடிப்பதற்காக அன்று; சத்தான அறம் வளரவேண்டும் என்பதற்காகவே அவன் எழுந்தருளியிருக் கிறான்.

அறச் செயல்கள் வளர்வதற்காக வந்து நிற்கும் பெரு மான் என் மகளுக்கு இடர் உண்டாக்குவது அறம் ஆகுமா?

**மறைநிறை சட்டறம் வளரத்**
**தேன்அமர் பொழில்சூழ் திருவிடைக்கழியில்**
**திருக்குரா நீழற்கீழ் நின்ற**
**கோன்.**

[வேதத்தில் நிறைந்து விளங்கும் சத்தான அறங்கள் வளரும் படி, வண்டுகள் விரும்பும் சோலைகள் சூழ்ந்த திருவிடைக்கழி என்னும் தலத்தில் நிலைபெற்று விளங்கும் இறைவன்.

சட்டறம் - சத்தான அறம். சத் என்பது சட்டென வந்தது. வட மொழிச் சொற்களில் வரும் தகரம் சில சமயங்களில் தமிழில் டகர மாக மாறுவதுண்டு; வீரட்டானம், மூலட்டானம் என்பவற்றைக் காண்க. தேன் - வண்டுகள். அமர் - விரும்பும்.]

இப்படி உலகில் அருள் நிலையங்களை அமைத்துக்கொள் வது வழி வழியே வந்த பண்பு. முருகனுடைய தந்தையாரும்

அவ்வாறு செய்பவரே. அவர் தலைமை பூண்டு எழுந்தருளி யுள்ள கோயில்கள் எத்தனை! கோயில் என்று நினைத்தவுடன் நம் உள்ளத்தே முதலில் தோன்றுவது சிதம்பரம். அதுதானே அடையின்றிக் கோயில் என்று சொல்வதற்கு ஏற்ற பெருமையை உடையது? அந்த அருள் நிலையத்தில் சிவபெருமான் தாம் ஐந்தொழிலும் நடத்துவதைக் குறிப்பாகத் தம் கூத்தினுலே புலப்படுத்தியருளுகிறுர். அறம் வளரக் கோயிலில் நின்றும், இருந்தும், ஆடியும் கடமையாற்றும் பெருமானுர் அவர். அவருடைய குலத்தில் தோன்றிய இளைய புதல்வன் முருகன்; வீரத்திலும் வெற்றிமிடுக்கிலும் களிற்றைப்போன்றவன். தானும் தன் தந்தையும் அறம் வளர்வதற்காகவே இவ்வுலகத்தில் கோயில் கொண்டிருக்கும்போது, என் பெண்ணுக்குத் தீங்குபுரிவது அறமாகுமா?

**அமர் கூத்தன் குல இளங் களிறு.**

[யாவரும் விரும்பிச் சென்று தரிசிப்பதற்குரிய நடராசப் பெருமானுடைய குலத்தின் இளைய ஆண்யானை போன்ற பிள்ளை. அமர் - விரும்பும்.]

குணமலை யென்றும் பண்பில் ஓங்கியவனென்றும் புகழ் ஏற்ற முருகன், அமரர் இடையூற்றைப் போக்கி நலம் புரிந்த கோமான், வள்ளலுடைய பிள்ளை, அறம் வ்ளர இடைக்கழி நின்ற கோன், அறம் வளர்க்கும் கூத்தனின் இளங்குமரன் தன் இயல்புக்கு மாருக என் மகள் படும் இன்னலை அறியாமல் இருக்கிறுன்; தன்னை நம்பினவளைக் காப்பது அறம் என்பதை மறந்திருக்கிறுன்; கொடிபோன்ற மெல்லியலாகிய இவளுக்கு இடரை உண்டாக்குவது அவனுடைய நற்பண்புக்கு ஏற்றதாகுமா?

இவ்வாறு முருகன் பேரழகிலே உள்ளத்தைப் பறிகொடுத்து வாடும் பெண்ணை எண்ணி அவள் தாய் மறுகிறுள்.

தான்அமர் பொருது, வானவர் சேனை
மடியச்சூர் மார்பினைத் தடிந்தோன்;
மான்அமர் தடக்கை வள்ளல்தன் பிள்ளை;
மறைநிறை சட்டறம் வளரத்
தேன்அமர் பொழில்சூழ் திருவிடைக்கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
கோன்;அமர் கூத்தன் குலஇளங் களிறு;என்
கொடிக்கிடர் பயப்பதும் குணமே?

[என் கொடிக்கு - பூங்கொடிபோன்ற மெல்லியலாகிய என் மகளுக்கு. பயப்பது — உண்டாக்குவது. குணமே - நல்ல பண்பு ஆகுமா? அமர்கூத்தன் என்பதையும் முருகனுக்கு ஆக்கி, 'யாவரும் விரும்பும் மயில் மேலாடும் பெருமான், சிறந்த இளங்களிறு போன்றவன்' என்று பொருள் கொள்வதும் ஒரு முறை.]

இந்த அருமைப் பாடல் சேந்தனார் பாடிய திருவிடைக்கழித் திருவிசைப்பாவில் வரும் நான்காவது பாடல்.

# இது அழகோ?

நன் மகளைத் தாய் பார்த்தாள். அவள் வாட்டமுற்றுக் கிடந்தாள். மான்குட்டி போலத் துள்ளி விளையாடிச் சிரிப்பும் பாட்டுமாகக் கலகலப்பாக இருக்கும் பெண் அவள். இப்போது ஏக்கமே உருவமாகச் சோர்ந்து கிடக்கிருள். ஊரெல்லாம் பாராட்டும் குணம் நிறைந்தவள் அவள். அழகுக்குத் தான் குறைவா? அவளுடைய கூந்தல் நீல மணிபோல இருக்கும்; சுருள் சுருளாக இருக்கும். இப்போது அதை வாரிக் கொள்ள நினையாமல் கிடக்கிருள் அவள். அவள் வாய் கொவ்வைக் கனிபோல இருக்கிறது. அவள் என்ன நினைந்து வருந்துகிருளோ? அவள் படும் இடரைத் தாயினுல் நன்கு அறிய முடியாது. ஆனல் அந்தப் பெருமான் அறிய முடியாதா? இப்படிக் கவனிக்காமலிருப்பது அவனுக்கு அழகா?

அவன் மக்களுடைய இடரைக் கவனிக்காமல் இருப்பவன் அல்லவே! பேசாமல் சுகமாகக் கந்தலோகத்திலே இருந்துவிடலாம் அவன். அப்படி இருந்தால் பலருக்குப் பயன் விளையாமல் போய்விடும். யாவரும் உய்யவேண்டுமானல் அவர்கள் காண அருகில் வந்து வாழவேண்டும். அவன் அப்படிச் செய்கிருன்.

உலகில் உள்ளவர்கள் வாழவேண்டுமானல் அவர்களுக்கு வேண்டிய மழை, காற்று, தீ முதலியன வெல்லாம் வேண்டிய போது வேண்டிய அளவு கிடைக்க வேண்டும். அவற்றை வழங்கும் சக்தி உடையவர்களே தேவர்கள். அரசாங்க அதிகாரிகள் மக்களுக்கு நலம் செய்வார்கள். அவர்களுக்கு மாதந்தோறும் அரசாங்கத்தில் சம்பளம் கிடைக்கிறது. அந்தச் சம்பளத்தை அவர்களுக்குக் கொடுப்பதை நிறுத்திவிட்டால் அவர்கள் வேலை செய்யமாட்டார்கள்.

அதுபோல இறைவனுடைய அரசாங்கத்தில் அமரர்கள் மக்க ளுக்கு நலம் செய்யும் அதிகாரிகள். அவர்களுக்கு மறைய வர்கள் அக்கினி காரியம் செய்து ஆகுதி கொடுத்து உண வளிக்கிருர்கள். வேள்வித்தீ எழுப்பி நெய்யும் அவியும் சொரிந்து தேவர்களை வழிபட்டு அவர்களைத் திருப்திப்படுத்து கிருர்கள். அவர்கள் செய்யும் வேள்விகளால் தேவர்கள் மகிழ்ந்து உலகம் வாழத் தாம் செய்ய வேண்டியவற்றைச் செய்கிருர்கள்.

வேள்வி செய்யும் அந்தணர்கள் நீர் நாண செய் சொரிந்து தீ வேட்கிருர்கள். அவர் கையும் உடலும் நெய் மணக்கின்றன. அந்த மணத்தை அணிந்த மறையோரை முருகன் காப்பாற்றுகிருன். "அந்தணர் வெறுக்கை" என்று திருமுருகாற்றுப்படை கூறுகிறது. முருகன் தானே இவ்வுல கிற்கு வந்து மூர்த்திகரித்து ஆலயங்களில் எழுந்தருளியிருக் கிருன். அவனை வணங்கி வேள்வி செய்து வாழ்கிருர்கள் அந்தணர்கள். அவர்கள் வாழ, வேள்வி மல்குகிறது. அதனல் தேவர்கள் வாழ்கிருர்கள். அவர்கள் வாழ, மழை காலத்தில் பெய்கிறது; காற்றுப் பருவத்தில் வீசுகிறது. அதனல் வையத்திலுள்ள மக்கள் வாழ்கிருர்கள்.

இவ்வளவும் ஒன்றை ஒன்று தொடர்ந்து நடைபெறுகின் றன. முருகன் பூவுலகில் திருவிடைக்கழியில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருப்பதனல் நெய்மணத்தை அணியும் மறையோர் உய்கிருர்கள்; அவர்களால் ஆகுதி பெறும் வான வர் உய்கிருர்கள்; அவர்களால் வையம் உய்கிறது. அது மட்டோ? அந்தத் தாய் வாழுவதே முருகப்பெருமான் திருவரு ளால்தானே? தன் மகளைப் புறக்கணித்துவிட்டான் என்பதற் காக உண்மையை மறைத்துப் பேசலாமா? அந்தப் பெரு மான் நம் அருகே வந்து எழுந்தருளியிருக்கிருன் என்றதைரியத் தால் அந்தத் தாய் எத்தனையோ இடர்ப்பாடுகளை வென்றிருக் கிருள். அதை எளிதில் மறக்கமுடியுமா?

குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
படும்இடர் குறிக்கொளா தழகோ?
மணம்அணி மறையோர் வானவர் வையம்
உய்யமற்று அடியனேன் வாழத்
திணமணி மாடத் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற...

இவ்வாறெல்லாம் எண்ணுகிறாள் முருகனிடம் காதல் பூண்ட மங்கையின் தாய்.

திருவிடைக்கழியில் குராமரத்தினடியில் எழுந்தருளியிருக்கும் முருகன் தனக்கு வேறு இடம் இல்லாமையினாலா அங்கே வந்திருக்கிறான்? அன்று, அன்று; உலகம் உய்யவேண்டும் என்று வந்திருக்கிறான். வந்து கோயில்கொண்ட இடம் தாழ்ந்ததா? உறுதியான, திண்ணமான, மணி மாடங்கள் உள்ள அழகிய ஊர் திருவிடைக்கழி; மறையோரும் பிறரும் அந்த மாடங்களில் வாழ்கின்றார்கள்; அங்கே தனக்கும் ஓர் இருக்கையைக் கொண்டு உறைகிறான் முருகன்; நல்ல மரநிழல் அடர்ந்த இடத்தில் எழுந்தருளியிருக்கிறான்.

மனிதர்கள் வாழும் இந்த இடத்தில் வந்து தங்கி யிருப்பது, அவனுடைய கருணையினாலே. பெரிய மனிதர்களை உறவாகப் பெற்றவர்கள் தமக்கு ஒரு பெருமை இல்லாவிட்டாலும், அந்த உறவினர்களின் பெருமையை நினைந்து செருக்கடைவது உலக இயல்பு. முருகன் எவ்வளவோ உயர்ந்த உறவினர்களைப் பெற்றவன்; அத்தகையவன் இங்கே வந்து நம்மோடு ஒருவனாக வாழ்கிறான். எவ்வளவு எளிய பண்பு!

அவன் உறவினர்கள் யார் தெரியுமா? கங்காதேவியின் குமரன் அவன்; காங்கேயன் என்பது அவன் பெயர்களில் ஒன்று. அவனைத் தன் அலைக்கரங்களால் தாங்கிப் பெருமிதமும் மகிழ்ச்சியும் கொண்டவள் கங்கை. கங்கை தூய்மைக்கு உறைவிடம். கங்கையின் நீர் பளிங்குபோலத்

தூயது; கூட்டமாகப் பளிங்கு கிடந்தால் எப்படி இருக்கும், அப்படி உள்ளது. அத்தகைய கங்கை யன்னையின் புதல்வன் முருகன்.

எப்போதும் பெருங் கூட்டத்தின் நடுவே இருப்பவன். கணபதி. எத்தகைய தடைகளையும் போக்கி எடுத்த காரியத்தில் வெற்றி உண்டாகச் செய்பவன். அவனை வணங்காதவர் யாரும் இல்லை. அத்தகைய பெருமானுக்குப் பின் வந்த தம்பி இப்பெருமான்.

இவ்வளவு சிறந்த அண்ணல், உலகத்தினர் வாழ உலகில் வந்து இக் கோயிலில் வாழ்கிறான். அவன் கருணையை அள விட முடியுமா? மறையோர் உய்ய, வானவர் உய்ய, வையம் உய்ய—ஏன், இந்தத் தாயே வாழ—வந்து எழுந்தருளிய வள்ளல், இந்த மடந்தைக்கு உண்டான இடரை எண்ணாமல் இருக்கலாமா? 'எங்கோ இருப்பவன்; ஆதலால் தெரியாது' என்று சொல்ல வகையில்லை. அவன் எங்கே யிருப்பினும் அறியாதது ஒன்றும் இல்லை; இங்கே அருகிலேயே எழுந் தருளி யிருக்கிறான்.

தன்னால் யாவரும் வாழ்வு பெறவேண்டும் என்று இறங்கி வந்தவன் ஓர் இளம்பெண் வாழ்வு பெறாமல் ஏங்கு கிறாள் என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டாமா? இது அவனுக்கு அழகா?—தாயின் சிந்தனை இவ்வாறெல்லாம் படர்ந்தது.

> குணமணிக் குருளைக் கொவ்வைவாய் மடந்தை
> படும்இடர் குறிக்கொளா தழகோ?
> மணம்அணி மறையோர் வானவர் வையம்
> உய்யமற்று அடியனேன் வாழத்
> திணமணி மாடத் திருவிடைக் கழியில்
> திருக்குரா நீழற்கீழ் நின்ற
> கணமணி பொருநீர்க் கங்கைதன் சிறுவன்,
> கணபதி பின் இளங் கிளையே.

[நெய்மணத்தைக்கொண்ட மறையோரும் வானவரும் உலகில் உள்ளவரும் உயிர் பிழைக்க, அடியேன் வாழ, உறுதியான மணி களாலான மாடங்களை யுடைய திருவிடைக்கழியில், அழகிய குரா மரத்தின் நிழலின்கீழ் எழுந்தருளிய, கூட்டமான பளிங்கை ஒத்த நீரையுடைய கங்கையின் புதல்வன், கணபதிக்குப் பின் வந்த தம்பி, குணத்தையும், நீலமணிபோன்ற சுருண்ட கூந்தலையும், கொவ்வைக் கனி போன்ற வாயையும் உடைய இந்தப் பெண் படுகின்ற துன் பத்தைத் திருவுள்ளத்தில் கொள்ளாமல் இருப்பது அழகாகுமா?

குணமடந்தை, மணிக்குருளை மடந்தை, கொவ்வை வாய் மடந்தை என்று கூட்டிக்கொள்ள வேண்டும். மணி - நீலமணி. குருளை - சுருண்ட கூந்தல். மடந்தை என்பது பருவத்தைக் குறியா மல் பெண்ணென்னும் துணையாய் நின்றது. குறிக்கொளாதது என்றது செய்யுள் விகாரத்தால் குறைந்து நின்றது. மணம் அணி - நெய் முதலியவற்றின் மணத்தைப் பெற்ற. வையம் - உலகத்திலுள் ளோர்; ஆகு பெயர். மற்று: அசைநிலை. அடியனேன் என்றது தாய் தன்னையே கூறிக்கொண்டது. திணம் - திண்ணம்; இடைக்குறை; உறுதி யென்னும் பொருள் உடையது. மணி - நீல மணி, மாணிக் கம் முதலிய மணிகள். கணம் - கூட்டம். மணிபொரு - பளிங்கை ஒத்த; கங்கையின் நீர் வெண்மையானது. இளங்கிளை - தம்பி.]

இது திருவிடைக்கழித் திருவிசைப்பாவில் 5-ஆவது திருப்பாட்டு.

# அருளுவாரு?

தூய் இப்போது முருகனுடைய இயல்பை எண்ணிப் பார்க்கிருள். தன் மகளுக்கு ஏற்ற மணவாளன் அவன் என்பதை அவள் நெஞ்சம் சொல்கிறது. உலகில் பெண்ணைப் பெற்றவர்கள் தம்முடைய பெண்களுக்கு வரன் பார்ப்பதாக இருந்தால் மணமகன் இன்னபடி இருக்கவேண்டும் என்று எதிர்பார்ப்பார்கள். தந்தை, பிள்ளை அறிவுடையவனுக இருக்கவேண்டும் என்று விரும்புவான். தாயோ, செல்வனுக இருக்கவேண்டும் என்று அவாவுவாள். மற்ற உறவினர்கள் நல்ல குலமாக இருப்பதை விரும்புவார்கள். மணம் புரிய இருக்கும் பெண்ணே, இளமையும் அழகும் வீரமும் உள்ள வனுக இருக்க வேண்டும் என்று ஆவல் கொள்வாள். முருக னிடம் இந்தத் தகுதிகள் எல்லாம் இருக்கின்றன. அவற்றை இப்போது எண்ணிப் பார்க்கிருள் தாய்.

பெண் எதை விரும்புவாளோ அந்தத் தகுதி அவனிடம் பரிபூரணமாக இருக்கிறது. இளமை, அழகு, வீரம் ஆகிய வற்றையே இளநங்கை விரும்புவாள் என்பதைத் தாய் நன்கு அறிவாள்; அவளும் இளம் பெண்ணுக இருந்தவள் தானே?

முருகனுடைய இளமை அவனுடைய திருமேனி முழு வதும் மெருகூட்டிக் கிளைத்திருக்கிறது. என்றும் இளைய பிராணுகிய அவன் அழகோ கண் கொள்ளாதது. "பிள்ளை கறுப்பா, சிவப்பா?" என்று கேட்பது உலகியல். "சிவப்பு" என்ருல் திருப்தி உண்டாகும். இந்த இளைய பிள்ளை நல்ல சிவப்பு. "செங்கோட்டுப் பிள்ளை சிவந்த பிள்ளை" என்று ஒரு புலவர் பாடுவார். "செய்யன் சிவந்த ஆடையன்" என்பது திருமுருகாற்றுப்படை. சிவப்பு அழகுக்கு அடையாளம்.

சிவந்த நிறம் பெற்றதனால்தான் முருகனுக்குச் சேய் என்ற திரு நாமம் வந்தது. உரையாசிரியர்கள் சேய் என்று வரும் இடங்களில், பிள்ளை யென்று உரை எழுதாமல், சிவப்பு நிற முடையவன் என்றே எழுதுவார்கள். முருகன் தளிர்த்துக் கிளைக்கும் இளமையையும் அழகுச் சிவப்பையும் உடைய பெருமான்.

### கிளை இளம் சேய்.

அவனுடைய வீரம் எத்தகையது? கிரவுஞ்சம் என்னும் மலையைப் பிளந்த ஆண்மையை உடையவன் அவன். ஓர் அசுரனே மலைவடிவாகப் பறந்தும் படிந்தும் தேவர்களுக்கும் மக்களுக்கும் இடர் விளைத்து வந்தான். அவனைப் பிளந்து வெற்றியை நிலை நாட்டிய ஆண்டகை முருகன். அவனுடைய வீரத்துக்கு அடையாளமாவும், வெற்றிப் போருக்குக் கருவி யாகவும் இருப்பது அவன் திருக்கரத்தில் உள்ள வேல். அது முருகன் திருக்கரத்தில் என்றுமே அழிவின்றி விளங்குவது. புறக்கண்ணுடையாருக்கு வீர வேலாகவும், அகக் கண்ணுடை யாருக்கு ஞான வேலாகவும் புலனாவது அது. அதுவே அவனுடைய வீரத்துக்கும் ஞானத்துக்கும் அறிகுறியாக விளங்குவது. அதை ஏந்திய அவன் பெருஞ் செல்வன்.

### கிரிதனைக் கீண்ட ஆண்டகை
### கேடில் வேற் செல்வன்.

இப்போது மணப் பெண்ணுக்கும் தகப்பனுக்கும் தனக் கும் விருப்பமான இயல்புகள் யாவும் அவனிடம் பொருந்தி யிருப்பதை எண்ணிப் பார்த்துத் திருப்தி அடைந்தாள். பெண்ணுக்கு வேண்டியவையே எல்லாவற்றிலும் முக்கியம். கிளை இளம் என்பதனால் இளமையும், சேய் என்பதனால் அழகும், கிரிதனைக் கீண்ட ஆண்டகை என்பதனால் வீரமும் தெரியவந்தன. கேடில் வேல் என்றது ஞானத்தைக் குறிப்பது ஆதலின் அவன் ஞானபண்டித சாமி என்பதைத் தெரிந்து கொள்ளலாம். அந்தத் தகுதியைத் தந்தை விரும்பு

வான். செல்வன் என்பதனால் தான் விரும்புவதும் அவனிடம் உண்டு என்பதை உணர்த்தினாள்.

இனிச் சுற்றத்தார், நல்ல குடும்பத்தில் உதித்தவன் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புவார்கள். முருகனோ இருமரபும் தூயவன். அவனுடைய தந்தையின் பெருமையும் தாய் மாமன் பெருமையும் உலகறிந்தவை. அவன் தந்தை சிவபெருமான்; வளைந்த இளம் பிறையைத் தன் சிவந்த சடையிலே அணிந்த பெருமான்; தூய்மை தவிர்ந்து குறையவும் வளரவும் சாபம் பெற்ற சந்திரனைத் தன் திருமுடியிலே வைத்துத் தூய்மையுறச் செய்த கருணையாளன்.

வளை இளம் பிறைச் செஞ்சடை அரன் மதலை.

முருகனுடைய மாமன் நீலமேக சியாமள வண்ணம் படைத்த திருமால். கண்ணுக்குக் குளிர்ச்சி தருவது மேக நிறம். அதை யுடையவனுக்கு முருகன் மருகன்.

கார் நிற மால் திரு மருகன்.

இப்போது முருகனிடம் மணமகனுக்குரிய எல்லாம் நன்கு பொருந்தியிருப்பதை அறிந்து உவந்தாள் தாய்.

"பெண்விரும்பும் காளை பிதாவிரும்பும் வித்தையே
எண்ணில் தனம்விரும்பும் ஈன்றதாய்—நண்ணிடையே
கூடிய சுற்றம் குலம்விரும்பும் காந்தனது
பேரழகு தான்விரும்பும் பெண்"

என்பது ஒரு பழம் பாட்டு. அதில் சொல்லப்பெற்ற தகுதிகள் யாவும் முருகனிடம் அமைந்திருக்கின்றன.

இவ்வளவு நலங்களையுடைய பெருமான் எட்டாத கொம்பிலே கிட்டாத கனியாக இருக்கிறானா? இல்லை, இல்லை; இதோ அணிமையிலுள்ள திருவிடைக்கழியில்தான் இருக்கிறான். மக்களெல்லாம் வந்து உலாவித் தென்றலும் நிழலும் நறுமணமும் தீங்கனியும் நுகர்ந்து திளைக்கின்ற சோலைகள் சூழ்ந்த திருவிடைக்கழியில் குராமரத்தடியில் அவன் தன்

மாளிகையை அமைத்துக்கொண்டு வாழ்கிறுன. பூம்பொழிலில் அந்த மரத்தடியில் நிற்கும்போது அவனைப் பார்த்தால் கொம்பு முளைக்கும் பருவத்திலுள்ள இளைய யானைக் குட்டியைப்போலத் தோன்றுகிறுன். என்ன அழகு! என்ன அழகு!

> திளை இளம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
> திருக்குரா நீழற்கீழ் நின்ற
> முளை இளங் களிறு.

தன் பெண்ணை நினைக்கிறுள். அவளும் நல்ல அழகி. அவளை அடிமுதல் முடிவரையில் வருணித்துக்கொண்டிருக்க நேரமேது? தலைமையான அழகு தலையழகு. அவள் கூந்தலழகி. அடர்ந்து மொய்த்த குழலை உடைய அவள் இளம் பெண்; சிறுமி. அழகும் இளமையும் உடைய அந்தப் பெண்ணை இளமை, அழகு, வீரம், அறிவு, செல்வம், குலம் ஆகிய எல்லாம் உடைய அவன் ஏற்றுத் திருமணங் கொண்டருளினுல் எவ்வளவு நன்றுக இருக்கும்!

தாய்க்குத் தன் பெண்ணை முருகனுக்கு மணம் செய்து கொடுக்கச் சம்மதந்தான். இது பாதிக்கல்யாணம் ஆனது போன்றது. ஆனுல் மறுபாதியும் நிறைவேறினுல் தானே திருமணம் உண்மையில் நிகழும்? ஆம்; அந்தப்பிள்ளை, முருகவேள் என்னும் திருநாமம் உடைய பிள்ளை, இந்தப் பெண்ணின்மேல் இரக்கம் வைத்து ஏற்றுக்கொள்ள வேண்டுமே! அவனுக்குக் கிடைக்காத பெண் இல்லை. அழகும் இளமையும் உள்ள பெண்கள் எத்தனையோ பேர். ஆனுலும் இவள் அவனையே நினைந்து வாடுகிறுள். அதை நினைந்து இரங்கிப் பரிவுடன் இவளை ஏற்றுக்கொள்ள அவன் திருவுள்ளம் கொள்ளவேண்டும்; கொள்வாளு?

> என் மொய்குழற் சிறுமிக்கு
> அருளுங்கொல், முருகவேள் பரிந்தே?

முருகன் பெருமையையெல்லாம் எண்ணி மனம் களித்துத் தன் பெண்ணுக்கு ஏற்ற நாயகன் என்பதை

உணர்ந்து உவந்த தாய், பிறகு அவன் இவளை ஏற்றுக் கொள்வானா என்று எண்ணும்போது அவள் உள்ளம் உருகியது. அவள் சொல்வதாகப் பாட்டு அமைந் திருக்கிறது.

கிளை இளஞ் சேய், அக் கிரிதனைக் கீண்ட
ஆண்டகை, கேடில்வேற் செல்வன்,
வளை இளம் பிறைச்செஞ் சடைஅரன் மதலை,
கார்நிற மால்திரு மருகன்,
திளை இளம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
முளை இளம் களிறுஎன் மொய்குழற் சிறுமிக்கு
அருளுங்கொல் முருகவேள் பரிந்தே?

[கிளைத்துப் பரந்த இளமையையுடைய செம்மை நிறத்தான், அந்தக் கிரவுஞ்சமலையைப் பிளந்த ஆண்மையை உடையவன், அழி வற்ற வேலை ஏந்திய செல்வன், வளைந்த இளைய பிறையை அணிந்த சிவந்த சடையையுடைய அரனுடைய பிள்ளை, மேகத்தின் நிறம் பெற்ற திருமாலின் அழகிய மருமகன், யாவரும் வந்து இன்பம் நுகர் கின்ற சோலைகள் சூழ்ந்த திருவிடைக்கழியில் தெய்விகத் தன்மை வாய்ந்த குராமரத்தின் நிழலின்கீழ் நிலவும், கொம்பு முளைக்கும் இளைய ஆண்யானை போன்றவன், முருகவேள் என்னும் திருநாமம் உடையவன், அடர்ந்த குழலையுடைய என் இளம் பெண்ணுக்கு இரங்கி அருள் செய்வானா?

கிளை - கிளைக்கும்; பரவும். சேய் - செந்நிறம் உடையவன். கிரி - மலை; இங்கே கிரவுஞ்சமலை. அ : பண்டறி சுட்டு. கீண்ட - பிளந்த. மதலை - புதல்வன். மாலுக்கும் திருவுக்கும் மருகன் என்றும் பொருள் கொள்ளலாம். திளை - இன்பம் நுகர்கின்ற. இளம் பொழில்- வளம் மங்காத சோலை. முளை - முளைக்கின்ற; முளைபோன்ற இளமை யையுடைய எனலும் ஆம். பரிந்து - இரங்கி. சேய், ஆண்டகை, செல்வன், மதலை, மருகன், களிறு, முருகவேள் பரிந்து அருளுங் கொல் என்று வினைமுடிவு செய்க.]

இது சேந்தனார் திருவிசைப்பாவில் ஆறாவது பாடல்.

# ஐயுறும் வகை

இந்த முறை பெண்ணின் தாய் திருவிடைக்கழிக்குச் சென்று நின்று நிதானமாக முருகனைத் தரிசித்துவிட்டு வந்தாள். அவனுடைய திருமேனிப் பேரழகைக் கண்டு வியப்பில் ஆழ்ந்தாள். 'இவனுடைய தெய்வத் திருமேனி எங்கே! மானிட மகளாகிய இவளுடைய நிலை எங்கே!' என்ற எண்ணம் அப்போது அவளுக்கு உண்டாயிற்று.

ஊருக்கு வந்தாள். முருகனுடைய உருவம் அவள் அகக் கண்ணில் நின்றது. அவள் புறக்கண்ணுக்கு எதிரே அவளுடைய மகள் நின்றாள். இயற்கையில் அந்தப் பெண் நல்ல அழகிதான். ஆனால் இப்போதோ முருகன்மேல் காதல் கொண்டமையால் உடம்பெல்லாம் மெலிந்து பசலை பூத்து நிற்கிறாள். அவளுடைய தோற்றம் தாய்க்கு இரக்கத்தை உண்டாக்கியது.

மிகவும் இனிமையாகப் பேசும் பெண் அவள்; அஞ்சொல் இளநங்கை. இப்போது யாரோடும் பேசுவதே இல்லை. முருகனிடம் மையல் கொண்டாள். அதனால் துயரம் இல்லை. அந்த மையல் நிறைவேறுமோ இல்லையோ என்று அவள் ஒவ்வொரு கணமும் எண்ணி எண்ணி ஏங்கு கிறாள். இந்த ஏக்கந்தான் அவளைக் குலைக்கிறது. மையல் கொள்ளாமல் இருக்கவேண்டும். அப்படிக் கொள்வதாக இருந்தால், நிச்சயமாக முருகன் அருள் செய்வான் என்ற உறுதி இருக்கவேண்டும். அந்த உறுதி இல்லாமல் மையலைக் கொண்டுவிட்டு எப்போதும், "அவன் அருள்வானோ, மாட் டானோ!" என்று ஐயுற்று நிற்கிறாள் அவள். அவளுக்கு மைய லால் வந்த துன்பத்தைவிட ஐயத்தால் வந்த துன்பமே மிகுதி.

தாயின் தோழி ஒருத்தி வீட்டுக்கு வந்தாள். "உன் மகள் ஏன் இப்படி இருக்கிறாள்?" என்று கேட்டாள்.

"அவளுக்கு முருகனிடத்தில் மையல்!" என்றாள் தாய்.

"திருவிடைக்கழியில் இருக்கிறானே, அந்தப் பெருமானிடமா?"

"ஆம்."

"அவனுடைய நிலையை நீ அறிவாயா?" என்று தோழி கேட்டாள்.

தாய் தான் சென்று வந்ததைச் சொன்னாள்; "நேற்றுத்தான் போயிருந்தேன்; கண்ணை இமைக்காமல் அப்பெருமானைப் பார்த்தேன். என்ன தேசு! என்ன தேசு! அக்கினிப் பிழம்பு போலத் தோன்றினான். சிவபெருமானுடைய அக்கினிக் கண்ணிலிருந்து தோற்றிய ஞானக் கொழுந்து அவன் என்பது நினைவுக்கு வந்தது. இவ்வுலகத்தார் உய்ய வேண்டும் என்று கருதி நம் கண் காணப் பரிவுடன் இங்கே எழுந்தருளியிருக்கிறான். கருணையையுடைய செஞ்சுடராகிய அக்கினியோ என்று சற்றே நின்று யோசித்தேன்."

"ஆம், அவன் திருமேனி செங்கனலைப் போலச் சிவப்பாக இருக்குமென்றுதான் சொல்கிறார்கள்."

"மற்றொரு விதத்தில் அவன் கதிரவனைப் போலக் காட்சி அளித்தான். புற இருளைப்போக்கும் வான சூரியனைப்போல அக இருளைப் போக்கும் ஞான சூரியனாக அவன் இலங்குகிறான். இருளின் கூறு சிறிதளவும் அவனை அணுகாது."

"பெரியவர்கள் அவனை ஆயிரங்கோடி சூரியர் ஒன்றாக இருந்தாற் போன்ற உருவுடையவன் என்றுதான் புகழ்கிறார்கள்."

"சூரியன் உச்சிவானத்தில் இருக்கும்போதே நம்மால் பார்க்க முடியவில்லையே! இவனோ நாம் 'கண் கொண்டு பார்க்கும்படி எழுந்தருளியிருக்கிறான். எத்தனை கூட்டம்

இருந்தாலும் அவனுடைய வடிவம் மற்றவர்களினின்றும் நன்ருக எடுத்துக் காட்டுகிறது. மேகக் கூட்டத்தினிடையே மின்னலைப்போல அவன் திருவுருவம் கண்ணைப் பறித்தது."

"மின்னலையும் கதிரவனையும் சொல்கிருயே! அவை வானத்தில் இருப்பவை அல்லவா? அப்பெருமான் நாம் எப்போது போய்க் கண்டாலும் காணும்படி எளியனுக இருக்கிருனே!"

"அதுவும் உண்மைதான். பவளம் போல என்று சொல்லலாம் அல்லவா? பவளந் திரண்ட கோல மென்றே சொல்லவேண்டும். 'பவளத்தன்ன மேனி' என்று பழைய பாடலில் இருக்கிறதே!"

"சிவபெருமானே பவளக்குன்றம் போல இருப்பவர்; அவருடைய திருமகன்தானே?"

"அப்படியானல் முருகனைப் பவளத்தின் குழவி என்று சொல்லலாம் போல் இருக்கிறது. சில சமயங்களில் அவன் திருமேனி பொற் சோதியுடன் இலங்குகிறது. சிந்துர வண்ணமும் பொன்னும் இணைந்த ஓருருவம் அது. சிவப்பாலே சிந்துரமும் தேசிஞலே பொன்னும் இணைந்த பேரழகு அது!"

"பவளம், பொன் என்று மக்கள் பாராட்டும் பொருள்களை யெல்லாம் வரிசையாகச் சொல்லிவிட்டாயே! இன்னும் என்ன எஞ்சியிருக்கிறது?"

"அவனுடைய திருவுருவம் உவமைக்கு அப்பாற்பட்டது; ஈடும் எடுப்பும் அற்றது. நாம் நம்முடைய அறியாமையினல் நமக்குத் தெரிந்தவற்றை யெல்லாம் சொல்லி வைக்கிருேம். மாணிக்கம்போல அவனுடைய ஒவ்வோரங்கமும் சோதியும் செம்மையும் உடையதாக விளங்குகிறது; தூமணித்திரள் என்று சொல்லலாமோ என்று ஓர் எண்ணம் உதிக்கிறது; ஆனல் யாவும் அவனுடைய திருமேனிக்கு ஒப்பு

ஆவதில்லை. இத்தனை சொல்லியும் சொன்னதாகவே இல்லை.''

"நீ சொல்லியவை எல்லாமே ஒப்புப் பொருள் அல்ல வென்றால் அவனை எப்படித்தான் சொல்வது?''

"அழகே அவன் வடிவம். உலகத்தில் அழகுள்ள பொருள்கள் பல உண்டு; ஆனாலும் அவன் அழகைப் பார்த்த கண்களுக்கு வேறு ஒன்றும் அழகாகத் தோன்றாது. இத் திருமேனி அழகை உடையது என்று சொல்வது கூடப் பிழை; அவன் திருமேனி வேறு, அழகு வேறு என்பது இல்லை. அழகே வடிவெடுத்திருக்கிறது. அழகா? அழகுள்ளே சிறந்த அழகரசு என்று ஒன்று இருந்தால் அதற்கு இதுதான் வடிவம் என்று சொல்லவேண்டும்.''

**பரிந்து செஞ் சுடரோ! பரிதியோ! மின்னோ!**
**பவளத்தின் குழவியோ! பசும்பொன்**
**சொரிந்த சிந்துரமோ! தூமணித் திரளோ!**
**சுந்தரத் தரசு இது! என்ன.**

"நீ பார்த்தவன் முருகனா? வேறு தேவனா?"

"நன்றாகச் சொன்னாய்! எனக்கு அவனை அடையாளம் தெரியாதா? வரிந்து கட்டிய வில்லைக் கையில் ஏந்திக் கொண்டு நிற்கிறான் அவன். பகைவருக்கு வெம்மையைத் தரும் வெஞ்சிலை அது. வேல் எடுத்த கையிலே வில்லையும் எடுப்பவன் என்பது எனக்குத் தெரியும்.''

"ஆம், ஆம்; 'வானோர் வணங்கு வில் தானைத் தலைவ' என்று நக்கீரரும் பாடியிருக்கிறார். திருவிடைக்கழியில்தானே அந்தப் பெருமகனைத் தரிசித்தாய்?''

"ஆம்; வேதமும் சாத்திரங்களும் தெரிந்த வைதிகர்களாகிய அந்தணர் வாழும் திருவிடைக்கழியில் திருக்குராமரத்தின் நிழலில் அவன் நின்றிருந்தான். வெஞ்சிலைக்கை மைந்தனாகிய முருகன் அவன் என்பதை நன்கு அறிந்தேன்.''

"அவனுடைய காட்சியைக் கண்டதால் விளைந்த இன்பம் அளவற்றதாக இருக்கும்."

"அது உண்மைதான். ஆனால் அதற்குமேல் எனக்கு ஒரு கவலை வந்துவிட்டது. இவ்வளவு ஒளியும் அழகும் உடைய தெய்வத் திருமேனியைப் பெற்ற மைந்தனிடம் மனம் போக்கி மையலாலே வாடுகிறாளே, இந்தப் பைத்தியக்காரப் பெண்! இவளை நினைத்தால் என் வயிறு பகீர் என்கிறது. அவன் அருள் கிடைக்குமா, கிடைக்காதா என்று ஐயுற்றுத் தடுமாறுகிறாள் இவள். இவள் எங்கே? அவன் எங்கே? இவள் ஐயுறும் திறத்தைப்போலப் பேதைமை வேறு இல்லை. இதில் என்ன ஐயம் இருக்கிறது?"

"அவனுடைய திருமேனி எழிலுக்கு என்ன உவமை கூறலாம் என்பதில்தான் ஐயம் உண்டே ஒழிய, இவளுக்கு அவன் மணவாளன் ஆவானா என்பதில் உனக்கு ஐயம் இல்லை போலிருக்கிறது."

"நன்றாகச் சொன்னாய்! உவமை காண இயலாத அந்தச் சுடருருவன் மானிட மகளுக்குரியவனாக ஆவான் என்ற நினைப்பே தவறு. இதை அறியாமல் இவள் கிடந்து தடுமாறுகிறாள். என்ன பேதைமை!"

தாயின் கூற்றாகச் சேந்தனார் பாடுகிறார்:

> **பரிந்தசெஞ் சுடரோ! பரிதியோ! மின்னோ!**
> **பவளத்தின் குழவியோ! பசும்பொன்**
> **சொரிந்தசிந் தூரமோ! தூமணித் திரளோ!**
> **சுந்தரத் தரசிது என்னத்**
> **தெரிந்தவை திகழ்வாழ் திருவிடைக் கழியில்**
> **திருக்குரா நீழற்கீழ் நின்ற**
> **வரிந்தவெஞ் சிலைக்கை மைந்தனை அஞ்சொல்**
> **மையல்கொண் டையுறும் வகையே!**

[இரங்கி வந்த சிவந்த கனலோ! கதிரவனோ! மின்னலோ! பவளத்தின் குழந்தையோ! பசிய பொன்னைச் சொரியும் சிந்தூர

*மோ! தூய மாணிக்கத்திரளோ! அழகின் அரசு இது என்று சொல்லும்படி, வேதம் முதலியவற்றை ஆராய்ந்து அறிந்த வைதிக அந்தணர் வாழ்கின்ற திருவிடைக்கழியில் அழகிய குராமரத்தின் நிழலின்கீழ் நின்ற, இறுகக் கட்டிய வெவ்விய வில்லை ஏந்திய கையையுடைய மைந்தனாகிய முருகனிடம் அழகிய சொல்லையுடைய பெண் காதல் கொண்டு, அருள்வானோ மாட்டானோ என்று ஐயம் அடையும் திறம் இருந்தவாறு என்னே!*

பரிந்த - இரங்கிய. பரிதி - சூரியன். சிந்துரம் - குங்குமம்; செவ்வண்ணம். மணி - மாணிக்கம். சுந்தரத்து அரசு இது - அழகுக்கு அரசாக உள்ள இவ் வடிவம். அதுவோ, இதுவோ, அன்று, அரசு இது என்று சொல்லும்படி என்க; சுந்தரத்து அரசு இது சுடர் முதலியனவோ என்று கூட்டியும் பொருள் கொள்ளலாம். என்ன - என்று கண்டார் கூற. தெரிந்த - ஆராய்ந்த. வரிந்த - கட்டிய. வெம்சிலை - பகைவருக்கு வெம்மையாகிய வில். மைந்தன் - வலிமையையுடையவன். அஞ்சொல் - அழகிய சொல்லை உடையவள்; அன்மொழித்தொகை. மையல் - காம மயக்கம். மைந்தனை: உருபு மயக்கம். ஐயுறுதல் - அருள்வானோ அருளானோ என்று ஐயம் கொள்ளுதல். வகையே - வகை இருந்தவாறு என்ன பேதைமை!]

இது திருவிடைக்கழித் திருவிசைப்பாவில் ஏழாவது பாடல்.

# மடல் தொடங்கினாள்

தலைவிக்கு முருகன்மேல் அடங்காத காதல் உண்டாகி விட்டது. அவனுடைய அருள் தனக்குக் கிடைப்பது அரிது என்று அஞ்சினாள். உள்ளத்தே தோன்றிய காதலை மாற்ற இயலுமா? ஒருவனுக்கென்று அளித்த உள்ளம் வேறு யாருக் கும் இடம் கொடாதே! ஊரார் அறியத் தன் ஆற்றாமையைச் சொல்லிப் புலம்பிப் பிறர் நெஞ்சில் இரக்கம் உண்டாகும் படி செய்யலாமா என்று யோசித்தாள். அப்போது அவளுக்கு ஒரு நினைவு வந்தது.

காதலன் ஒருவன் தான் காதலித்த பெண்ணை மணம் செய்ய விரும்பி அதற்கு ஆவன செய்கிறான். பெண்ணைப் பெற்றவர்கள் இணங்குவார்கள் என்று தோன்றவில்லை. அதனால் தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட காதலியை அவனால் மறந்துவிட முடியுமா? ஊரார் அறியத் தனக்கும் அவளுக்கும் உள்ள தொடர்பை வெளியிட்டுச் சான்றோர்முன் நின்று அவர்களுக்கும் அதனைப் புலப்படுத்தினால், அவர்கள் உண்மையை உணர்ந்து இருவரையும் ஒன்றுபடுத்துவார்கள். தம்மிடையே உள்ள நட்பையும் தன் காதலியைப் பெறும் உரிமை தனக்கு இருப்பதையும் மற்றவர்களுக்குத் தெரிவிக்க அவன் ஓர் உபாயம் செய்வான். பனமடலால் குதிரையைப் போன்ற உருவத்தைச் செய்து, அதில் தன் படத்தையும் தன் காதலி படத்தையும் எழுதி மாட்டிக்கொள்வான். எருக்கு மாலை அணிந்து விகாரமான கோலம் புனைந்து, பைத்தியம் பிடித்தவனைப்போன்ற தோற்றத்துடன் அந்த மடல்மாவில் ஏறி ஊரைச் சுற்றி வருவான். இப்படிச் செய்வதற்கு மடலூர்தல் என்று பெயர்.

இந்த வழக்கம் முருகனிடம் உள்ளத்தைப் பறிகொடுத்த இளம் பெண்ணுக்கு நினைவு வந்தது. ஆனால் ஆடவர்கள் மடல் ஏறுவது வழக்கமேயன்றிப் பெண்கள் அவ்வாறு செய்வதில்லை.

செய்வதாகச் சிலர் வாயினால் சொல்வார்கள். "நாம் மடல் ஏறினால் என்ன? இதுகாறும் எந்தப் பெண்ணும் மட லேறியது இல்லை என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால் என்னளவு துயரம் அடைந்தவர்கள் யார்? நான் முரு கனைக் காதலித்து மறுகிக் கிடந்தேனானால் என்னை வீட்டில் யாரும் கவனிக்கமாட்டார்கள்; ஊராரும் கவலைப்படமாட்டார் கள். நான் நாணை அடியோடு அகற்றிவிட்டு ஊர றிய மடலே றினால்தான் வீட்டில் உள்ளவர்களுக்குப் படும்" என்று எண் ணினாள் அந்த இளம்பெண். வீட்டிலுள்ளோர் காதில் படும்படி தன் தோழியுடன் சொன்னாள்.

அதைக் கேட்ட தாய்க்குத் தூக்கிவாரிப்போட்டது. 'இந்தப் பெண்ணுக்கு இவ்வளவு துணிவு வந்துவிட்டதே!' என்று அஞ்சினாள். 'பெரு வீரனாகிய முருகன் இவளுடைய காதலை உணராமல் இருக்கிறானே!' என்று வருந்தினாள். பித்துப் பிடித்தவர்களை அடக்கினாலும் காதல் முறுகினவர் களை எப்படி அடக்குவது? அவள் சிந்தனையில் ஆழ்ந் திருந்தாள்.

அப்போது அவளுடைய தோழி வந்தாள்; "என்னவோ ஆழ்ந்த சிந்தனையில் இருக்கிறாயே! முகத்தில் வாட்டம் மூட் டம் போட்டிருக்கிறதே!" என்றாள்.

இளம் பெண்ணின் தாய் சிந்தனையிலிருந்து தெளிந் தாள். "ஆம், ஆழ்ந்த சிந்தனைதான். வழி தெரியாத திண் டாட்டத்தில் தத்தளிக்கிறேன்" என்றாள்.

"உனக்கு என்ன துயரம் வந்துவிட்டது?"

"எனக்கு ஒரு கேடும் இல்லை. என் மகளுக்குத்தான் வந் திருக்கிறது."

"மகளுக்கா? அவளுக்கு என்ன உடம்பு?"

"உடம்புக்கு ஒன்றும் இல்லை; உள்ளத்தில்தான் கோளாறு."

"என்ன செய்கிறுள்?"

"மடல் ஏறப் போகிறுளாம்!"

"இதென்ன கூத்து? பெண் மடல் ஏறுகிறதா?"

"நாணம் என்பது கழன்றுவிட்டால் பெண் எதைத் தான் செய்யமாட்டாள்?"

"அவ்வளவு தூரத்துக்கு வருவானேன்? அவள் யாரைக் காதலிக்கிறுளோ, அவனுக்கே அவளை மணம் முடித்துவிடு கிறது தானே?"

"எனக்குச் சம்மதந்தான்; அவன் இணங்க வேண்டுமே! பாதிக் கல்யாணம் ஆனுல் போதுமா?"

"அந்தப் பிள்ளையாண்டான் யார்? இவளுக்கு ஏற்றவன் தானே?"

"அவன் பெருவீரன்; வகைவகையாக இருந்த அசுரர்கள், தேவர்களுக்கும் நல்லவர்களுக்கும் இடுக்கண் செய்து வந்தார் கள். தேவர்கள் முப்பத்து மூன்று கோடியினர் என்ருல், அசுரர்கள் அறுபத்து ஆறு கோடிப் பேர்கள். அவர்களெல் லாம் மாளப் போர் செய்து தன் வீரத்தைக் காட்டினுன் அவன். அவர்களுடைய மதில்களை உழிஞைமாலை பூண்டு சென்று அழித்தான். வாளால் அமர் செய்தான். சிறிதும் சோர்வின்றித் தாளாண்மையுடன் அமரை விளைத்தான்."

வகைமிகும் அசுரர் மாள வந்து
உழிஞை வாள் அமர் விளைத்த் தாளாளன்.

"அவனுடைய தந்தை யார்?"

"அவரும் பெரிய வீரர். மூன்று மதில்களை வைத்துக் கொண்டு உலகுக்குத் தீங்கு செய்தார்கள், மூன்று அசுரர் கள். அவர்களுடைய முப்புரங்களையும் புகை மிகுந்த தீயில்

படுசூர்ணமாகப் போகும்படி செய்தவர் அவர். தம் கையில் பொன் மலையையே வில்லாக வளைத்து வைத்துக்கொண் டிருக்கிறவர். அத்தகைய வீரருக்குப் புதல்வன்தான் என் மகளுடைய காதலன்.''

**புகைமிகும் அனலில் புரம் பொடி படுத்த**
**பொன்மலை வில்லி தன் புதல்வன்.**

''அவன் எந்த ஊரில் இருக்கிறவனோ?''

"திக்கெல்லாம் பாராட்டும் கீர்த்தியை யுடைய திரு விடைக் கழியில் இருக்கிறான்.''

''அவனை அங்கே சென்றால் பார்க்கலாமோ?''

''நன்றாகப் பார்க்கலாம். அங்கேயுள்ள திருக்கோயிலில் அழகிய குரா மரத்தின் நிழலில் அவன் நின்றுகொண் டிருப்பான்.''

''அவனுடைய திருநாமம் எது?''

''திருநாமமா? ஒன்றாக இருந்தால் இதுதான் என்று சுட்டிச் சொல்லலாம். அல்லது பத்துப் பெயர்கள் என்றால் அவற்றையும் சொல்லலாம். அவனுடைய பெயர்கள் பல பல; அவற்றை எண்ணிக்கையில் அடக்க முடியாது; பெயர் களின் தொகை எண்ண எண்ண மிகுந்துகொண்டே செல்லும்.''

**திகைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில்**
**திருக்குரா நீழற்கீழ் நின்ற**
**தொகைமிகு நாமத்தவன்.**

''நீ சொல்வனவற்றை யெல்லாம் பார்த்தால், அன்பர் கள் யாவரும் வந்து வணங்கும் திருவடியையுடைய முருகன் என்றல்லவா தோன்றுகிறது?''

''ஆம், ஆம், நீ சொல்வது சரிதான். அவன் திருவடியை எண்ணித்தான் இவள் மடலேறுவேன் என்று தொடங்கி யிருக்கிறாள்.''

"இவளா மடலேறப் போகிறுள்? இவள் எவ்வளவு மென்மை உடையவள்!"

"துடிபோன்ற இடையையுடைய என் மகள்தான் மடல் தொடங்கினுள்."

தாயின் கூற்றைப் பின் வரும் பாடல் தெரிவிக்கிறது.

வகைமிகும் அசுரர் மாளவந்து உழிஞை
வாள்அமர் விளைத்ததா ளாளன்,
புகைமிகும் அனலில் புரம்பொடி படுத்த
பொன்மலை வில்லிதன் புதல்வன்,
திசைமிகு கீர்த்தித் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
தொகைமிகு நாமத் தவன்திரு வடிக்கென்
துடிஇடை மடல்தொடங் கினளே.

[இனங்கள் மிக்க அசுரர்கள் மாளுவதற்காகத் திருவவதாரம் செய்து பகைவர் மதிலைக் கோடலாகிய உழிஞைத்திணைப் போரை வாளால் விளைத்த முயற்சியை யுடையவன், புகை மிக்க நெருப்பில் மூன்று புரங்களைப் பொடியாக்கிய மேரு மலையை வில்லாகவுடைய சிவபெருமானுக்குப் புதல்வன், திசைகளில் மிக்குப் பரவிய புகழை யுடைய திருவிடைக்கழி யென்னும் தலத்தில் அழகிய குரா மரத்தின் நிழலில் நின்றருளும், எண்ணிக்கையில் மிக்க பல திருநாமங்களை யுடையவனுகிய முருகனது திருவடியின்பொருட்டு, துடி போன்ற இடையையுடைய என் மகள் மடலூர்தலைத் தொடங்கினுள்.

வகை - இனம், பிரிவு, வந்து -அவதரித்து. மதிலை முற்றுகையிடுவது உழிஞைத்திணையின்பாற் படும்; அப்போது உழிஞை மாலையை வீரர் அணிவர். உழிஞை அமர், வாள் அமர் என்று தனித்தனியே கூட்டுக. தாளாளன் - பெரு முயற்சியுடையவன். பொன் மலை - மேரு. திரிபுர சங்காரத்தின்போது இறைவன் மேருவையே வில்லாக வளைத்துச் சென்றுன் என்பது புராண வரலாறு. திசை -

திசை, தொகை - எண்ணிக்கை; கூட்டமுமாம். திருவடிக்கு - திருவடியை அணுகும் பொருட்டு, அவன் காதலைப் பெறும் பொருட்டு என்பது கருத்து, மடல் ஏறுவேன் என்று சொல்வதைக் கேட்டு அஞ்சினமையால் மடல் தொடங்கியதாகவே கூறினாள். துடியிடை: அன்மொழித் தொகை.]

இது சேந்தனார் திருவிசைப்பாவில் எட்டாம் பாடல்.

# குறமகள் இறைவன்

தலைவி மடலேறுவேன் என்பதைக் கேட்டுக் கவலை கொண்டிருக்கும் தாய்க்கும் அவள் தோழிக்கும் உரையாடல் தொடர்ந்து நடைபெறுகிறது.

தோழி: திருவிடைக்கழியில் இருக்கும் முருகன் பெருமையை நீ நன்கு அறிவாயா?

தாய்: அறியாமல் என்ன?

தோழி: அவன் இருக்கும் திருப்பதியே மறை மணக்கும் இடமாயிற்றே. இறைவனை யன்றிப் பிறிது பொருள் ஏதும் நன்மை அளிப்பதன்று என்று அவனையே உறுதியாகப் பற்றிய திடத்தைப் பெற்ற அந்தணாளர்கள் இடைவிடாமல் மறையொலியால் அவனை ஏத்தெடுக்கும் இடம் அது.

தாய்: அது எனக்கு நன்றாகத் தெரியும். அதோடு முருகனுடைய பெருமையும் தெரியும். அவன் வீரத்திற் சிறந்தவன்; சிங்கம் போன்றவன்; உலகில் உள்ளவர்கள் தம்முடைய சிற்றறிவுக்கு ஏற்றபடி இரண்டு கண்களும் ஒரு முகமும் பெற்றிருக்கின்றனர். ஞானபண்டித சாமியாகிய அவனோ பன்னிரண்டு கண்களை உடையவனாக விளங்குகின்றவன்; ஆறுமுகனாகக் காட்சியளிக்கிறான். எங்கே எது நிகழ்ந்தாலும் காணும் ஆற்றல் உடையவன் என்பதை அந்தப் பன்னிரு நயனத்தவன் புலப்படுத்திக்கொண்டிருக்கிறான். அவன் அருள் கிடைத்துவிட்டால் கிடைக்கும் இன்பத்துக்கு அளவு இல்லை. அப்போது அவன் அமுதத்தைப் போல இனிப்பான்.

தோழி: அத்தகைய சிறப்பையுடையவனிடமா இவள் உள்ளத்தைப் பறிகொடுத்திருக்கிறாள்?

தாய் : ஆம்; அவனிடத்திலேதான் இவள் மயங்கியிருக்கிருள்.

திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
மடங்கலே, மலரும் பன்னிரு நயனத்
தறுமுகத் தமுதினை மருண்டே.

தோழி : இவள் நிலே எங்கே? அவன் நிலே எங்கே? இந்தப் பேதைப் பெண் எட்டாத கனிக்குக் கொட்டாவி விடலாமா?

தாய் : இந்தப் பெண்ணின் துயரத்தை அவன் அறிய மாட்டானு? பன்னிரு நயனமும், ஆறு முகமும் உடைய அவன் அறியாதது ஏதும் இல்லை. அவன் தன் மார்பில் அணிந்த மாலையை இவளுக்கு அளிக்கவேண்டாம். தன் திருமுடியிலே அணிந்திருக்கும் தொங்கலேக்கூடத் தரவேண்டாம். அந்தக் கண்ணியில் உள்ள மலரின் புறவிதழில் இரண்டை எடுத்து இவளுக்கு அனுப்பக்கூடாதா? அதைப் பெற்று இவள் உயிர் தளிர்ப்பாளே! ஊரார் அறிந்து ஏசும்படியாக இவள் மடலேறும் பேச்சை எடுத்ததை அறிந்து, இந்தச் சிறிய கருணை யாவது செய்யக்கூடாதா? அதனுல் அவனுக்கு என்ன குறை வந்துவிடும்? குடம்குடமாகப் பால் அருளும் வள்ளலே அந்தக் குடத்தைக் கழுவிய நீரையாவது தா என்று கேட்பதுபோல நான் கேட்கலாமென்று தோன்றுகிறது. அதைக்கூட அவன் தரமாட்டான்போல் இருக்கிறது.

தொடங்கினள் மடல்என் றணிமுடித் தொங்கற்
புறவிதழ் ஆகிலும் அருளான்.

தோழி : புறவிதழாக இருந்தால் என்ன, அகவிதழாக இருந்தால் என்ன? அல்லது மாலேயாகவே இருந்தால்தான் என்ன? மலரும் இதழும் மாலேயுமா இங்கே குறிக்கோள்? அவன் இவள் காதலே ஏற்றுக்கொண்டான் என்பதற்கு அடை

யாளந்தானே மாலை? அந்த அடையாளம் எதுவாக இருந்தாலும், முதலில் அவன் இவளை ஏற்றுக்கொள்ளத் திருவுள்ளம் கொள்ளவேண்டுமே! தன்னையே கொடுப்பதற்கு அறிகுறிதானே தாரைக் கொடுத்தல்?

தாய்: அதுவும் உண்மைதான்.

தோழி: அவன் ஏற்றுக்கொள்வதற்குரிய தகுதி இவளுக்கு இருந்தால்தானே மாலையோ மலரோ இதழோ கிடைக்கும்? அவன் இருக்கும் இடம் வைதிகர் வாழும் இடம் என்பது உனக்குத் தெரியும். அவன் சிங்க ஏற்றைப் போன்றவன் என்பதையும் நீ அறிவாய். பேரறிவாளன் என்பதை உலகமே அறியும். அப்படி இருக்க, இந்தப் பேதைப் பெண்ணின் காதலை ஏற்று அவன் மாலையை அனுப்பவில்லை என்று அங்கலாய்க்கிறாயே! இந்தச் சிறு பெண்தான் ஏதோ மயக்கத்தால் சொல்கிறாள் என்றால், அநுபவசாலியாகிய நீயும் இப்படிப் பேசுகிறாயே!

தாய்: நான் வீண் ஆசைப்படவில்லை; அதற்கும் நியாயம் இருக்கிறது. என் மகள் அவனை மணக்கும் தகுதி உடையவள் அல்லள் என்பதை அறிவேன். ஆனால் அவன் தன்னினும் தாழ்ந்த நிலையுள்ளவர்களுக்கும் அருள்புரிபவன்.

தோழி: அருள்புரிவது வேறு; மணம்புரிவது வேறு.

தாய்: மணம்புரிவதையே சொல்கிறேன். வைதிகர் வாழ் இடைக்கழியில் இருப்பவனானாலும் வேடர்கள் வாழும் மலைக்குச் சென்று திருமணம் செய்துகொண்டான்.

தோழி: அவன் தேவேந்திரனுடைய மகளை மணந்தவன் அல்லவா?

தாய்: ஆம்; அவளோடு குறத்தியாகிய வள்ளியையும் திருமணம் செய்துகொண்டான். தேவயானைக்கு எத்தனை உரிமையும் இடமும் உண்டோ அதே உரிமையும் இடமும் பெறும்படியாகக் குறத்தியை மணந்தவன். தேவயானை

திறத்தில் மணவாளனாக, தலைவனாக விளங்குவது போலவே, வள்ளி நாயகியின் திறத்திலும் இறைவனாகத் திகழுகிறான்.

தோழி: இந்தக் கதையை நானும் கேட்டிருக்கிறேன்.

தாய்: குறமகளை மணந்துகொண்ட வண்ணம் எப்படித் தெரியுமோ? அவளுடைய தாய் தந்தையர் வந்து வணங்கிக் கேட்டுத் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்று வேண்டிக்கொள்ளவில்லை. அவனே வேடனைப் போலக் கோலம் கொண்டான். வேடனைப்போலவே வேட்டையாடினான். வேடனுக்குரிய மறத்தொழிலைச் செய்தான். யாரும் அறியாமல் வள்ளியை எடுத்துச் சென்றான்.

தோழி: மறத்தொழிலுடையவனாகச் சென்று வள்ளியை மணந்தவன் உன் மகளை ஏன் மணக்கக் கூடாது என்று தானே கேட்கிறாய்?

தாய்: ஆம்; அவன், குறமகளும் தன்பால் இடம் பெறச் சென்று மறத்தொழில் புரிந்தது யாருக்கும் தெரியாமல் நடந்தது என்று சொல்லுவதற்கு இல்லை. ஊரும் உலகமும் அறிந்தது அது. சான்றோரும் நூல்களும் சான்று கூறும் வரலாறு அது. மறத்தொழில் வார்த்தையை உடைய அவன் என் மகளை ஏற்றுக்கொள்வது தவறா? வைதிகர் வாழ் இடைக்கழியில் நின்றான் என்பதை மட்டும் எண்ணினால், என் மகள் காதல் பயனற்றது என்று சொல்லிவிடலாம். அவன் குறத்தி திறத்திலும் இறைவன், மறத்தொழில் வார்த்தையும் உடையன் என்பதை எண்ணும்போதுதான் அவன் இவளை ஆண்டுகொள்ள நியாயம் உண்டு என்ற நம்பிக்கை உண்டாகிறது.

நற்றாயின் கூற்றாகச் சேந்தனார் திருவிடைக்கழித் திருவிசைப் பாவில் 9-ஆவது பாடலில் இந்தச் செய்திகளைப் புலப்பட வைத்திருக்கிறார்.

**தொடங்கினள் மடல்என்று அணிமுடித் தொங்கற்**
**புறஇதழாகிலும் அருளான்;**
**இடங்கொளக் குறத்தி திறத்திலும் இறைவன்;**
**மறத்தொழில் வார்த்தையும் உடையன்;**
**திடங்கொள்வை திகர்வாழ் திருவிடைக் கழியில்**
**திருக்குரா நீழற்கீழ் நின்ற**
**மடங்கலே, மலரும் பன்னிரு நயனத்து**
**அறுமுகத்து அமுதினே மருண்டே.**

*[உறுதியையுடைய வைதிகர்கள் வாழும் திருவிடைக்கழி என்னும் திருத்தலத்தில் அழகிய குரா மரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் சிங்கம் போன்றவனும் மலர்ந்த பன்னிரண்டு திருவிழிகளையும் ஆறு முகங்களையும் உடைய அமுதம் போன்றவனுமாகிய முருகனைக் கண்டு மயங்கி மடலேறுவேன் என்று பேசத் தொடங்கினாள் என்று அறிந்து, அப்பெருமான் தன் அழகிய திருமுடியில் அணிந்த மாலையின் மலரில் உள்ள புறவிதழையேனும் அளிக்கவில்லை. தன் இடத்திலே இருக்கும்படிக் குறமகளிடத்திலும் தலைவனாக இருப்பவன்; வேடர்களுக்குரிய மறத்தொழிலுடையவன் என்று பலர் பேசும் வார்த்தைகளையுடையவன்.]*

# கோமளக் கொழுந்து

அவர்கள் வாழும் இடம் திருப்பிடவூர். அன்னையும் மகளும் அவர்கள் தோழியரும் அடிக்கடி திருவிடைக்கழி யில் எழுந்தருளியுள்ள முருகனைத் தரிசித்துக்கொண்டு வரு வார்கள். அப்படி ஒருமுறை சென்று வந்தபோதுதான் அந்த இளம்பெண் முருகன்மேற் காதல் பூண்டு மயங்கி யிருந் தாள். அதைக் கண்டு வருந்திய அவள் தாய் பலபலவாக எண்ணியும் பேசியும் தனக்கு உண்டான துயரைச் சொல்லு கிருள்.

திருப்பிடவூரிலும் கோயில்கள் உண்டு. குன்றிலே பொழில் வளர்ந்தால் எப்படி வளப்பத்துடன் இருக்கும்! அப்படி வளர்ந்த பொழில்கள் உண்டு. யாவரும் கண்டால் பிரமிக்கும் மாளிகைகளில் மக்கள் உறைந்தார்கள். அங்கே வாழும் மடந்தையர் மான்போன்ற வெருண்ட பார்வையை உடையவர்கள். அவர்களுக்குமட்டும் அருள் செய்ய மாட் டேன் என்ற விரதமா முருகன் கொண்டிருக்கிருன்?

இளம் பெண்ணின் அன்னை இவற்றை எண்ணிப் பார்க் கிருள். 'இந்த ஊரே அழகியது; இந்த ஊரிலுள்ள கோயில் அழகியது; பொழில்கள் மிகமிக அழகியன; பெண்களுடைய அழகுக்குச் சொல்லவேண்டியதே இல்லை. அவர்களின் கண் அழகே போதுமே! அவர்களுக்கு முருகன் அருள் செய்ய மாட்டான? தன்னுடைய காதலியைப் பிரிந்து பொருளே பெரிதாகக் கருதிச் செல்லும் ஆடவன் பாலை நிலத்து வழியே போவான். தன் வீட்டில் ஒவ்வொரு கணமும் தன் பிரிவைத் தாங்காமல் துடித்துக் கொண்டிருக்கும் காதலியின் துன்பத் தைச் சிறிதும் எண்ணுமல் பொருளை ஈட்டுவது கடமை

யென்று செல்வான். இப்படிப் பிரிந்து செல்லும் பாலை நிலச் செலவை யுடையவனை விடலை என்று சொல்வார்கள். பாலை நிலத்தில் சிறிதும் ஈரம் இல்லாதது போல விடலையின் நெஞ்சிலும் ஈரம் இல்லாமல் இருக்கும். பெண்ணின் துயரத்தைச் சிறிதும் அறியாத கொடுமையை நெஞ்சிலே உடையவன் விடலை. முருகனும் பெண்ணின் உள்ளத்துயரை அறியாத விடலைதானே? எல்லாப் பெண்களுக்குமா அவன் விடலையாக இருப்பவன்?'

அன்னை சற்றே யோசனையை நிறுத்தினாள். அவளுடைய தோழி அப்போது வந்து சேர்ந்தாள்.

"என்ன குருட்டு யோசனை செய்துகொண்டிருக்கிறாய்?" என்று கேட்டாள்.

"என் மகளுடைய நிலையை எண்ணிக் கவலையில் ஆழ்ந்திருக்கிறேன்" என்றாள் அன்னை.

"கவலை ஏன்?"

அவள் தான் நினைத்தவற்றை யெல்லாம் எடுத்துச் சொன்னாள்.

"நன்றாக இருக்கிறது உன் சிந்தனை! கோயிலையும் பொழிலையும் எண்ணி உடனடியாகப் பாலை நிலத்தையும் விடலையையும் நினைக்கிறாயே! இங்கிருந்து அங்கே எப்படித் தாவியது உன் மனம்?"

"மனம் குரங்கு அல்லவா? அதனால் தாவுகிறது."

"பாலை நிலத்திலே பொருளின்மேற் பற்றுடையவனாகிப் போகும் ஒருவனையும் முருகனையும் ஒன்றாக எண்ணுகிறாயே! பைத்தியம் பிடித்துவிட்டதோ, உனக்கு?"

"என் கவலை எனக்குத் தெரியும்!"

"எனக்குக்கூடத் தெரியும்; ஆனால் கவலையில் நீ நினைக்க வேண்டியதை நினைக்காமல், சம்பந்தம் இல்லாதவற்றை எண்ணி வேதனைப்படுகிறாய்."

"எதை நினைக்க வேண்டுமென்று சொல்கிறாய்?"

"முருகனைத்தான்."

"அவனை நினைக்க நினைக்க எனக்குத் துயரம் பொங்கு கிறதே ஒழிய ஆறுதல் உண்டாகவில்லையே!"

"அவனுடைய இயல்பையும் அவன் இருக்கும் இடத்தை யும் நினைக்காமல் கற்பனையால் பாலை நிலத்தையும் விடலை யையும் நினைத்து வருந்துகிறாயே!"

"பின், எவற்றை நினைக்க வேண்டும்?"

"முருகன் இருக்கும் இடத்தையும் அவன் குடும்பத்தையும் அவன் இயல்பையும் எண்ணிப் பார். அவன் அருள் நிறைந்த வன், பெரிய குடும்பத்துப் பிள்ளை என்பதை யெல்லாம் எண்ணிப் பார். அவன் இருக்கும் திருவிடைக்கழியின் சிறப்பை எண்ணிப் பார். கொலைக்கு அஞ்சா வேடர் வாழும் பாலை நிலத்திலே செல்லும் விடலையை எண்ணுகிறாயே! மெய்யான அன்பையும் நன்றாகத் தெளிவுபெற்ற மெய்ஞ் ஞானத்தையுமுடைய மறைவாணர் வாழ்கிற இடத்தில் முரு கன் விளங்குகிறான். மலர்மல்கிய திருக்குராமரத்தின் நிழற்கீழ் நிற்கிறான். இவற்றை மறந்துவிட்டாயா? வீணே, 'திருப்பிட வூரில் உள்ள பெண்களுக்கு அருள் செய்யாமல் விடுவானோ? யாருக்கும் விடலையாக இருப்பானோ?' என்று அங்கலாய்க் கிறாயே!"

மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப்
பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
வெருண்டமான் விழியார்க் கருள்செயா விடுமே?
விடலையே எவர்க்கும்?மெய் அன்பர்
தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற...

"நீ சொல்வது உண்மைதான். அவன் மெய்யன்பர்களா கிய வைதிகரிடையே வாழ்பவன்தான்."

"அது மட்டுமா! அவன் குடும்பம் எத்தகையது தெரியுமா? நெற்றியிலே கண் படைத்த முக்கட்பிரான் அல்லவா அவனுடைய தந்தையார்? வளைவான குஞ்சியையும் பிறையை அணிந்த சடையையும் உடைய சிவபெருமானைப் பற்றி அறியாதார் யார்? அவருடைய பிள்ளை முருகன். அவன் எவ்வளவு கருணையை யுடையவன்! மென்மையானவன்; முருகனைப் போன்ற கோமள மூர்த்தியை எங்காவது பார்க்க இயலுமா? கொழுந்துபோல இளமையும் எழிலும் உடைய அந்தக் கோமள மனத்தனை விடலை யென்று சொல்லலாமா?"

அன்னை தன் நினைவையும் தன் தோழி கூறியவற்றையும் ஒருங்கே வைத்து எண்ணுகிறாள்;

> மருண்டுறை கோயில் மல்குநன் குன்றப்
> பொழில்வளர் மகிழ்திருப் பிடவூர்
> வெருண்டமான் விழியார்க் கருள்செயா விடுமே?
> விடலையே எவர்க்கும்?மெய் அன்பர்
> தெருண்டவை திகர்வாழ் திருவிடைக் கழியில்
> திருக்குரா நீழற்கீழ் நின்ற
> குருண்டபூங் குஞ்சிப் பிறைச்சடை முடிமுக்
> கண்ணுடைக் கோமளக் கொழுந்தே.

[இறைவனிடத்தில் மெய்யான அன்பையுடையவரும், தெளிந்த அறிவை யுடைய வைதிகருமாகிய பெரியோர் வாழ்கின்ற திருவிடைக்கழியில் அழகிய குராமரத்தின் நிழலின்கீழ் நின்றவனும்: சுருண்ட கேசத்தையும் பிறையை அணிந்த சடைமுடியையும் மூன்று கண்களையும் உடைய சிவபெருமானுடைய மென்மையான கொழுந்து போன்ற பிள்ளையாகிய முருகன், யாவரும் தன் சிறப்பை நோக்கி வியப்படைந்து தங்கும் கோயிலும் வளம் மல்கிய குன்றிலே வளரும் பொழிலைப் போன்ற பொழில்களும் வளர்கின்றதும், மகிழ்ச்சிக்கு இடமாவதுமாகிய திருப்பிடவூரில் உள்ள, அஞ்சிய மானின் விழியைப் போன்ற விழிகளை உடைய மங்கையருக்கு அருள் செய்யாமல் விடுவானோ? அவன் எல்லாருக்குமே கொடிய மனம் படைத்த விடலையோ? பொதுவாக வெருண்ட மான்விழியார்க்கு என்று சொன்னாலும், அவள் தன் மகளையே உள்ளத்தில் எண்ணினாள்.

முக்கண் உடைக் கொழுந்து விடுமே, விடலையே என்று கூட்டுக.

மருட்சி - பிரமிப்பு; வியப்பு. கோயில் - மாளிகையென்றும் கொள்ளலாம். குன்றப்பொழில் - குன்றத்திலே வளரும் பொழிலைப் போன்ற பொழில். செயாவிடுமே - செய்யாமல் விடுமே; செய்யாமல் என்பது ஈறு குறைந்தது; செய்யுள் விகாரம். விடுமே - விடுவானோ? விடலை - பாலைநிலத் தலைவன்; பெண்ணின் துயர் பாராமல் பிரிவுத் துன்பத்தைத் தந்து செல்கிறவன் அவன். அந்தப் பண்பு இவன்பாலும் உண்டோ என்பாள், விடலையே என்றாள். எவர்க்கும் விடலையே. ஏகாரம், வினா. மெய்யன்பராகிய வைதிகர். குருண்ட - சுருண்ட. குஞ்சி - ஆண் கேசம். குஞ்சியையும் சடையையும் உடைய முக்கண்ணன், முடித்தது சடை; எஞ்சி நின்றது குஞ்சி. முக்கண்: அன்மொழித் தொகை; முக்கண்ணையுடைய சிவபிரானுக்கு ஆயிற்று. அவனுடைய கொழுந்து, கோமளக் கொழுந்து என்று கூட்டுக. கொழுந்து - தளிர்; இங்கே இளங் குமரன் என்பதைக் குறிக்க வந்தது. கோமளக் கொழுந்தாக இருப்பவன் விடலையாக இருக்க நியாயம் இல்லையே என்றபடி.]

இதில் கூறிய திருப்பிடவூர் என்ற ஊர் இன்ன இடத்தில் உள்ளதென்று தெரியவில்லை. சேரமான் பெருமாள் நாயனார் பாடிய ஆதியுலாவை அவர் திருக்கைலையில் அரங்கேற்றிய போது கேட்ட சாத்தனார், அதனை வேதியர் நிறைந்த திருப் பிடவூரில் வெளிப்படப் பகர்ந்தார் என்ற செய்தி பெரிய புராணத்தில் வருகிறது. அந்தப் பிடவூரும் இந்தப் பிடவூரும் ஒன்றோ வேறோ அறியக் கூடவில்லை. திருச்சிராப் பள்ளிக்குப் பதினேழு மைல் தூரத்தில் ஒரு பிடவூர் இருக்கிறது. இப்போது திருப்பதட்டூர் என்று வழங்குகிறதாம். இங்கே சாத்தனார் கோயில் இருக்கிறது. சாத்தனாரின் திருக்கரத்தில் ஏடு இருக்கிறதாம். திருவுலா ஏட்டைக் குறிப்பது அது. இந்த ஊரே பெரிய புராணத்தில் குறித்த பிடவூர் என்பர்.[1]

சேந்தனார் திருவிசைப்பாவில் பத்தாவது பாடல் இது.

---

1. திரு சிவக்கவிமணி ஸ்ரீ. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் தம்முடைய பெரிய புராண விருத்தியுரையில் இந்தச் செய்தியைத் தெரிவித்திருக்கிறார்கள் (வெள்ளானைச் சருக்கம். ப. 6437).

# பயன்

ஏதேனும் ஒரு நூல் எழுதினால் அதற்குப் பயன் இன்ன தென்று சொல்வது ஒரு வழக்கு; தேவாரத்தில் திருஞான சம்பந்தப் பெருமான் ஒவ்வொரு திருப்பதிகத்திலும் கடைசிப் பாசுரத்தில் பயனைச் சொல்லியிருக்கிறார். அந்தப் பாடலைத் திருக்கடைக்காப்பு என்று சொல்வார்கள்; அதில் பயனோடு சம்பந்தப்பெருமான் தம் திருநாமத்தையும் இணைத்திருப்பார். "ஒரு நெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன் உரை செய்த, திருநெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே" என்பது போல வரும். வேறு பலரும் இந்த முறை யில் பாடியிருக்கிறார்கள்.

சேந்தனார், திருவிசைப்பாவில் திருவீழிமிழலை, திருவாவடு துறை என்னும் இரண்டு தலங்களில் உள்ள சிவபெருமானை யும், திருவிடைக்கழியில் எழுந்தருளியுள்ள முருகனையும் தனித்தனியே ஒவ்வொரு பதிகத்தில் பாடினார். திருப்பல் லாண்டும் அவர் பாடியிருக்கிறார். இவற்றில் திருவிடைக் கழித் திருவிசைப்பாவிலும் திருப்பல்லாண்டிலும் இறுதிப் பாடலில் தம் பெயரைக் கூறியிருக்கிறார். திருவிடைக்கழிப் பாடலில்மட்டும் பயனைச் சொல்லியுள்ளார். அதில் உள்ள பத்துப்பாட்டும் அந்தாதியாக இருப்பதோடு முதல் பாட்டின் முதலும் இறுதிப் பாட்டின் இறுதியும் ஒன்றி மண்டலித் துள்ளன. 'மாலுலா மனம்'' என்று முதற் பாட்டுத் தொடங்குகிறது; ''இடர்கெடும் மாலுலா மனமே'' என்று இறுதிப்பாட்டு முடிகிறது.

திருவிடைக்கழித் திருவிசைப்பா முழுவதும் முருகனை நாயகனாக வைத்துப் பாடியது; அவன்பால் காதல் கொண்ட தலைவியின் நிலையை அவளுடைய தாய் கூறும் முறையில்

ஒவ்வொரு பாட்டும் அமைந்திருக்கிறது. இதைப் பதிஞோராவது பாட்டின் முற்பகுதியில் சேந்தனுர் குறிக்கிருர். "கொழுமையான திரண்ட வாயையுடைய தாயின் மொழியாகச் சேந்தனுர் பாடியவை இவை; தூய மொழியைப் பேசும் அமரர்களுக்கெல்லாம் கோமாஞக விளங்கும் முருகனைப் பாடியவை" என்று சொல்கிருர்.

சேந்தஞருடைய ஊர் செப்புறை என்று தெரிகிறது. செழுமையான திரட்சி பெற்ற சோதியையுடைய செப்புறையாம். அங்குள்ள மாட மாளிகைகள் மணி குயிற்றியமையால் சோதி வீசுவனபோலும். சேந்தனுர் முருகனுடைய பெருமையை வாய்ப்பாகச் சொன்ன சொற்கள் இவை.

**கொழுந்திரள் வாய்ஆர் தாய்மொழியாகத்**
**தூய்மொழி அமரர்கோ மகனைச்**
**செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்**
**வாய்ந்தசொல் இவை.**

[கொழுவிய திரண்ட வாயைப் பெற்ற தாயின் கூற்ருகத் தூய மொழிகளையுடைய அமரர்தலைவஞகிய முருகனை, செழுமையும் திரட்சியும் உடைய சோதி நிறைந்த செப்புறை என்னும் பதியில் உள்ள சேந்தன் புகழும்படி அமைந்த சொற்கள் இவை.

தூய மொழி என்பதை அமரருக்கும் கூட்டலாம்; கோமகனுக்கும் கூட்டலாம்; அமரர் கோவாகிய சிவபிரானுடைய திருமகனை என்றும் பொருள் கொள்ளலாம்.]

இந்தப் பதிகத்தைச் சொல்லி முருகனை வழிபடுபவர்களுக்கு இடர் நீங்கும் என்று அடுத்தபடி சொல்ல வருகிருர். முருகனுக்குச் சுவாமி என்பது ஒரு பெயர். சுவாமியாகிய முருகன் திருவிடைக்கழியில் திருக்குரா நீழற்கீழ் நிற்கிருன். உதய சூரியனைப் போன்ற ஒளியையுடைய திருமேனியோடு அவன் காட்சி தருகிருன். உதய சூரியன் சிவப்பாக இரும்பான்; முருகனும் சிவந்த மேனியினன். காணக் கூசாத வடிவினன் உதய சூரியன்; முருகனும் அத்தகையவன். எழுங் கதிர் ஒளி போன்ற தேசு படைத்தவன் முருகன்.

அவன் எழுந்தருளியிருக்கும் திருவிடைக்கழியில் சோலை சூழ வளர்ந்திருக்கிறது; செழுமையான சோலை; பரந்து விரிந்து படர்ந்த சோலை. அங்கே சுவாமியும், எழுங்கதிர் ஒளியுமாகிய முருகனைத் தரிசிக்கலாம்; தரிசித்து இந்தப் பாடல்களையே சொல்லித் தோத்திரம் செய்யலாம்.

இசையோடு சொல்லும் ஆற்றலுள்ளவர்கள் இந்த இசைப்பாவைப் பாடலாம். பாட இயலாதவர்கள் காதாரக் கேட்கலாம். பாடினாலும் கேட்டாலும் நல்ல பயன் உண்டாகும்.

நம்முடைய மனத்தில் எப்போதும் மயக்கம் இருந்து கொண்டே இருக்கிறது. உண்மை இது, பொய் இது என்று தெரியாமல் கலங்குகிறோம். இந்த மயக்கம் கெடவேண்டும். அதற்கு நிலைக்களமான மனங்கூட அழியவேண்டும். மனம் என்பது மாயையின் சிறு துணுக்கு. சமஷ்டியாகிய மாயை யின் வியஷ்டியாகிய சிறு துண்டு மனம். அகண்ட மாயையின் கண்டம் இது. மனம் அற்றால் மாயை அறும்; மனமற்ற பரிசுத்த நிலையே இன்ப அநுபவ நிலை. அந்த நிலை வரும், இந்தப் பாடல்களைப் பாடினாலும் கேட்டாலும்.

சுவாமியையே,

செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதி ரொளியை ஏத்துவார் கேட்பார்
இடர்கெடும் மாலுலாம் மனமே.

[சுவாமியை, செழுமையான பரந்த சோலைகள் சூழ்ந்த திரு விடைக்கழியில் அழகிய குராமரத்தின் நிழற்கீழ் எழுந்தருளியிருக்கும் உதய சூரியனுடைய ஒளிபோன்றவனை, இந்தப் பாடல்களால் துதிப்பார், அவற்றைக் கேட்பவர் ஆகியவர்களுடைய துன்பங்கள் கெடும்; மயக்கம் பரவிய மனமும் கெட்டு இன்புறுவர்.

செழுந்தடமும் பொழிலும் சூழும் என்றும் கொள்ளலாம்; தடம் - தடாகம்; ஏத்துவார் என்று பொதுவாகக் கூறினும் இப்

பதிகத்தால் ஏத்துவார் என்று கொள்ள வேண்டும். சொல்லாகிய இவற்ருல் ஏற்றுவார் என்று முன்னுள்ளவற்ருேடு கூட்டுவதும் ஆம்; இடர் கெடும், மால் உலாம் மனம் கெடும் என்று கெடும் என் பதை இரண்டிடத்தும் கூட்டுக; இடை நிலை விளக்கு.

கேட்பாருக்கு மாலுலாம் மனத்தில் உள்ள இடர் கெடும் என்றும் சொல்லலாம்.]

இது தாயின் கூற்ருகப் பாடிய பதிகமாயினும் அகப் பொருட்டுறையாகாது. சுட்டி ஒருவரது பெயர் கொள்வன அகப்பொருளிற் சேரா. இது புறப் பொருளைச் சார்ந்த பாடாண் திணையில் கடவுளரை மானிடப் பெண்டிர் நயந்த பக்கத்தின் பாற்படும்.

திருவிசைப்பாவில் உள்ள மற்ற எல்லாப் பதிகங்களும் சிவபெருமானைப் பற்றியனவே. இந்த ஒன்று மாத்திரம் முரு கனைப் பாடியது. பன்னிரண்டு திருமுறைகளில் முருகனைப் பாடிய பகுதிகள் இரண்டு உள்ளன; ஒன்பதாந் திருமுறை யாகிய திருவிசைப்பாவில் உள்ள திருவிடைக்கழித் திரு விசைப்பாவாகிய இப் பதிகம் ஒன்று; பதினேராந் திருமுறை யில் உள்ளதும், நக்கீரர் பாடியதுமாகிய திருமுருகாற்றுப் படை மற்ருென்று.

கொழுந்திரள் வாயார் தாய்மொழி யாகத்
தூய்மொழி அமரர்கோ மகனைச்
செழுந்திரட் சோதிச் செப்புறைச் சேந்தன்
வாய்ந்தசொல் இவை;சுவா மியையே,
செழுந்தடம் பொழில்சூழ் திருவிடைக் கழியில்
திருக்குரா நீழற்கீழ் நின்ற
எழுங்கதி ரொளியை ஏத்துவார் கேட்பார்
இடர்கெடும் மால்உலாம் மனமே.

[சேந்தன் மகனைத் தாய் மொழியாக வாய்ந்த சொல் இவை; சுவாமியை, ஒளியை ஏத்துவார் கேட்பார் இடர், மனம் கெடும் என்று கூட்டுக.]

# முருகன் அழகு

கண்ணுடைய மக்கள் தரிசனம் செய்து, தம்முடைய உள்ளத்திலே சோதித் திருவுருவை எண்ணி, தியானித்து, மன ஒருமைப்பாடு பெற்றுப் பின்பு அருவத்தோடு கலந்து இன்புற வேண்டுமென்ற கருத்துடன், குணம் குறி இல்லாத இறைவன் உருவம் பெற்று வருகிறான். இந்தத் தத்துவத்தை உருவ வழிபாட்டை ஒப்புக்கொள்கிற சமயத்தினர் எல் லோரும் சொல்கிறார்கள். இறைவனது உருவம் கண்ணை முத லில் கவர்ந்து பின்பு கருத்தையும் கவரவேண்டும். கண்ணைக் கவர்கிற தத்துவந்தான் அழகு என்று பெயர் பெறும். இறைவன் பல்வேறு வகையில் திருவுருவம் கொண்டாலும் அழகுடைய திருவுருவமாக இருந்தால் எத்தகையவரும் அந்த மூர்த்தியினிடத்தில் ஈடுபடுவர். அந்த வகையில் பார்த்தால், இந்த நாட்டில் சைவத்திற்கும் வைணவத்திற்கும் அழகுத் திருமேனியுடைய மூர்த்திகளாக இருவர் இருப்பதைக் காண லாம். கந்தனும், கண்ணனும் பேரழகுத் திருக்கோலம் கொண்டு விளங்குகிறார்கள். அன்பு நெறி பற்றும் சைவர் கள் கந்தனையும், வைணவர்கள் கண்ணனையும் பாராட்டி வழி பட்டு இன்புற்றுத் தம்மை மறந்து நிற்கிறார்கள்.

முருகப்பெருமானுடைய திருவழகைப் பற்றி அன்பர்கள் பலபடியாகப் பாராட்டியிருக்கிறார்கள். அவன் என்றும் மாறாத அழகுடையவன்; என்றும் மாறாத இளமை உடை யவன். இளமையும் அழகும் ஒன்றி நின்றால் அங்கே கவர்ச்சி தானே வந்துவிடுகிறது. முருகன் என்ற சொல் லுக்கே பேரழகு உடையவன் என்று பொருள். முருகு என்பது தெய்வத்தன்மை, பேரழகு, இளமை, மணம் ஆகியவற்றை எல்லாம் குறிக்கும். இந்த நான்கு திறத்திலும் சிறந்து நிற்

பதனுலேயே முருகன் என்ற திருநாமம் கந்தபிரானுக்கு வந்தது.

"அரும்பெறல் மரபின் பெரும்பெயர் முருக"

என்று அத் திருநாமத்தின் அருமைப்பாட்டை நக்கீரர் திருமுருகாற்றுப்படையில் எடுத்தோதுகிறார்.

முருகனுடைய பேரெழிலைப்பற்றிச் சொல்லுகின்ற பெருமக்களுள் அருணகிரிநாதப் பெருமான் சிறந்தவர் என்று சொல்லவேண்டும். அவர் அவனுடைய அழகை அங்கம் அங்கமாகப் பார்த்துச் சொன்னதோடு, சமுதாய சோபை யையும் சொல்லியிருக்கிறார்.

"இழுமெ னருவி சொரியு மிமய முதல்வி புதல்வன் வருகவே
இயலு நடையும் வடிவு மழகு மெழுத அரியன் வருகவே
ஒழுகு கருணை முழுகு கமல வதனன் வருக வருகவே
ஒருவன் இருவ ரொடுகை தொழுந லுபய சரணன் வருகவே
விழுது விடுவெ ணிலவு பொழியும் நகையன் வருக வருகவே
விளரி பயிலு மளியும் ஞிமிறும் விரவு குரவன் வருகவே
மழலை முதிர முதிரு மதுர வசனன் வருக வருகவே
வளமை தழுவு பரிதி புரியின் மருவு குமரன் வருகவே"

என்றார் குமரகுருபரர்.

"என்றும்
இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே
உளையாயென் உள்ளத் துறை"

என்பது ஒரு பழைய பாட்டு.

முருகப்பெருமானைப் பிள்ளையாகப் பாடிய பிள்ளைத் தமிழ்க் கவிகளில் முத்துக்குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் என்பது ஒன்று. அதனைப் பாடியவர் குமரகுருபர சுவாமி கள். அவர் அப்பெருமானுடைய பேரெழிலைத் தம்முடைய சொல்லினுலே கோலம் செய்கிறார். அவர்,

"வடிவி னழகு மெழுத வரிய புயமும் நறிய செச்சையும்
மருமம் விரவு குரவு மரையின் மணியு மணிகொள் கச்சையும்
கடவு மயிலும் அயிலு மொழுகு கருணை வதன பற்பமும்
கமல விழியும் விழியும் மனமும் எழுதி யெழுதி நித்தலும்
அடிகள் எனவு னடிகள் பணியும் அடிய ரலது மற்றும்வே
றமரர் குழுவு மகில மறையும் அரியு மயனு முற்றும்நின்
முடியு மடியு முணர வரிய முதல்வ தருக முத்தமே
முனிவர் பரவு பரிதி புரியின் முருக தருக முத்தமே"

என்று பாடியிருக்கிறார்.

'திருச்செங்கோட்டுக்குச் சென்று முருகப்பெருமானுடைய திருவுருவப் பேரெழிலைக் கண்டு பேரானந்தம் பெற வேண்டும்' என்ற பசியோடு இருந்தது அருணகிரிநாதருடைய உள்ளம். செங்குத்தான மலை ஏறி அந்த இளைப்பு நீங்காது முருகப்பெருமானின் சந்நிதானத்தில் நின்றபோது, அவருடைய உள்ளத்தில் இருக்கிற பசியும், அப்பெருமானின் பேரெழிலின் ஏற்றமும் காரணமாக ஒரே சோதி வடிவமாய் முருகன் அவருக்குத் தோன்றினான். அந்தத் திருக்கோலத்தைக் கண்டு கண்டு ஆராத இன்பம் மாந்தினார். 'இந்த இரண்டு கண்களினால் மாத்திரந்தானே நான் காண்கிறேன்? பல கண்கள் இருந்தால் இன்னும் நன்றாக அநுபவிக்கலாமே' என்ற ஆர்வம் அவருக்கு எழுந்தது. அதன் பயனாக ஒரு பாட்டுப் பாடினார்.

"மாலோன் மருகனை மன்றாடி மைந்தனை வானவர்க்கு
மேலான தேவனை மெய்ஞ்ஞான தெய்வத்தை மேதினியில்
சேல்ஆர் வயல்பொழில் செங்கோ டனைச்சென்று கண்டுதொழ
நாலா யிரம்கண் படைத்தில னேஅந்த நான்முகனே."

முருகப்பெருமானுடைய பேரழகைப் பற்றி அடியார்கள் பாடியிருக்கிற பாடல்களை எல்லாம் கூட்டிப் பார்ப்பதற்கு இப்போது நேரம் இல்லை. பொதுவாக அவனுடைய பேரழகைக் கண்டு கண்டு மனம் கிளர்ந்தும் ஈடுபட்டும் உருகியும் இன்

புற்றவர் பலர் என்பதை இப்போது நினைப்பூட்டிக்கொண்டால் போதும்.

உலகத்தில் உள்ள மக்களிடையே உள்ள உறவை மூன்று வகையாகச் சொல்வார்கள் : நண்பர், பகைவர், அயலார் என்று. ஒருவரிடம் ஒருவர் அன்பு கொள்கின்ற தகைமையை நட்பு என்றும், அதற்கு நேர்மாருன தன்மையைப் பகை என்றும், நட்பும் பகையும் இல்லாமையை அயல் – நொதுமல் – என்றும் சொல்வார்கள். அமெரிக்க நாட்டில் ஒருவர் இருக்கிருர். அவரைப் பற்றி நமக்குக் கவலை இல்லை. அவர் நமக்கு நொதுமலர்.

ஏதேனும் ஒரு பொருளின் சிறப்பை நாம் தெரிந்து கொள்ள வேண்டுமாளுல் அந்தப் பொருளோடு தொடர்புடையவர்களையோ அபிமானம் உடையவர்களையோ கேட்டால் அதை மிகைப்படுத்திச் சொல்வர். இறைவனிடத்தில் ஈடுபட்ட பக்தர்கள் தங்கள் தங்கள் வழிபடு கடவுளின் பெருமையைச் சிறப்பித்துச் சொல்வது இயற்கை. அருணகிரிநாதர் போன்ற பெருமக்கள் முருகனுடைய பேரழகைப் பாராட்டுவது வியப்பன்று. அவர்கள் அந்தப் பெருமானுடைய அருளநுபவத்தைப் பெற்றவர்கள். அந்தத் திருவுருவத்தில் ஈடுபாடும் அபிமானமும் உடையவர்கள். அதனுல் பேரழகு உடையவன் முருகன் என்ருர்கள் என்று சொல்லலாம்.

ஒரு கூடத்தில் பல வகையான ஓவியங்களை மாட்டியிருக்கிருர்கள். சிவபெருமானின் திருக்கோலப் படம், தசாவதாரப் படங்கள், விநாயகர் திருவுருவப் படம், அம்பிகையின் திருவுருவம் ஆகியவற்றை மாட்டியிருக்கிருர்கள். அந்தக் கூட்டத்தில் இளமையும், அழகும் நிறைந்த முருகப்பெருமானின் படமும் இருக்கிறது. எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு வரும்போது முருகப்பெருமானுடைய திருவுருவத்தைக் கண்டு அந்த இளமை எழிலில் மனம் பறிகொடுத்து, "இந்த உருவம் அழகாக இருக்கிறதே! இது யாருடையது?"

என்று அயலார் யாராக இருந்தாலும் கேட்பார்கள். அதற்குக் காரணம் இளமையும், அழகும் உள்ள பொருளிடத்தில் மனித மனம் ஈடுபடும் என்பதுதான். வீதியிலே சின்னக் குழந்தையொன்று நடமாடிக்கொண்டிருந்தால் யாராக இருந்தாலும் அதை எடுத்துக்கொள்வார்கள். இன்னாருடைய குழந்தை என்று தெரியவேண்டிய அவசியம் இல்லை. அது போல் இளமையோடு அழகும் ஒருசேரத் திரண்ட பிழம்பாகிய மூர்த்தி முருகனுடைய படத்தை யார் கண்டாலும் இது அழகியது என்று சொல்லுவார்கள்.

ஆகவே அன்பர்கள் மட்டுமன்றி நொதுமலர்களாக இருப்பவர்கள்கூட இளமை, அழகு ஆகிய இரண்டும் ஒருசேரக் காட்சி அளிக்கும் முருகனைப் பேரழகுடையவன் என்று சொல்வார்கள்.

இந்த இரண்டு பேருடைய கருத்துங்கூட அத்தனை சிறப்பு உடையன என்று சொல்வதற்கில்லை. உண்மை ஒன்று இருக்குமானால் அந்த உண்மையைப் பகைவனும் ஒப்புக்கொள்ளவேண்டும். கதிரவனுடைய வெப்பத்தைத் தாங்கமாட்டாமல் ஒருவன் இருக்கிறான். ஆனாலும் கதிரவன் ஒளி கொடுக்கிறான் என்பதை அவன் மறுக்க முடியாது. அது போல் முருகப்பெருமானுடைய பேரழகைப் பகைவனும் போற்றினான் என்றால் அந்த அழகு உண்மையானது, உறுதியானது என்பது புலனாகும்.

கந்த புராணத்தில் முருகப்பெருமானுடைய பேரழகை அவனுடைய பெரும் பகைவனான சூரபன்மனே போற்றுகின்ற வரலாறு வருகிறது. முருகன் சூரபன்மனோடு போராடினான். அப்படிச் சொல்வதைவிட, 'பொல்லாத பிள்ளையாகிய சூரபன்மனை வசக்கித் தனக்கு அடியனாக்க வேண்டுமென்று போர்க்களத்தில் வந்து நின்றான் என்று சொல்வது பொருத்தம். சூரனும் முருகனும் செய்த போர் மிகப் பெரிய போர். அந்தப் போரில் சூரபன்மன்

முருகனைத் தன்னை அழிக்க வந்த பகைவனாக எண்ணினான். ஆனால் முருகனோ சூரபன்மனைத் தனக்கு அடியானாக ஆக்கிக் கொள்ள வேண்டுமென்று எண்ணினான். சூரபன்மனை அழித்துவிட வேண்டும் என்ற கருத்து முருகப்பெருமானுக்கு இருக்குமானால் போர்க்களத்தை உண்டாக்கி, பல பெரும் படைகளை அணிவகுத்து வரவேண்டும் என்பதில்லை. தன்னுடைய மனத்தில் ஒரு கணம் நினைத்தாலால் சூரபன்மன் மாத்திரம் அல்ல; அவனது அண்ட கோடி அத்தனையும் பஸ்மமாகிவிடும். ஆனால் முருகப்பெருமானுக்கோ சூரனை அழிக்க வேண்டுமென்பது கருத்தன்று. கையில் கத்தியை வைத்துக்கொண்டு கண்டகண்ட இடங்களிலெல்லாம் குத்திக் காயப்படுத்தும் தன் குழந்தையைத் தாய் கண்டு குத்தமாட்டாள். குழந்தையின் கையில் உள்ள கத்தியை ஏதாவது தந்திரம் செய்து பிடுங்க நினைப்பாள். அதுபோல் சூரபன்மனுடைய உள்ளத்திலுள்ள அகங்காரத்தையும், அறியாமையையும் நீக்குவதற்கு என்னவழி என்று இறைவன் எண்ணிப் பார்த்தான்.

'சூரனுக்கு, அவனுடைய பலவீனத்தைப் புலனாகும்படி செய்தால், "நம்முடைய பலம் எல்லாம் பலம் அன்று. இறைவனுடைய திருவருள் ஒன்றுதான் உறுதியானது" என்பதை உணர்ந்து, நம் அடியில் வந்து விழுவான்' என்று எண்ணினான்.

அதனால்தான் பல காலம் போர் செய்தான். அவனுடைய படைகளை எல்லாம் அழித்தான். அவனுடைய தம்பிகளும் மக்களும் அழிந்தனர். 'இந்தச் சமயத்திலாவது அவன் உணர்வு பெற்றுத் தன் வல்லமை இன்மையை உணர்ந்து நம்முடைய திருவடியில் வந்து விழுவானா? அப்படி விழுந்தால் ஆட்கொள்ளலாம்' என்று பார்த்தான். மாயம் வல்ல சூரன் தன் மாயங்களை எல்லாம் காட்டிப் போர் புரிந்தானேயொழிய முருகப்பெருமானது உண்மையை உணரவில்லை. "முருகன் என்ன, சின்னக் குழந்தைதானே?" எனத்

தலைதருக்கிப் பகை உணர்ச்சியிலே வெறி பிடித்து நின்றான் அவன். 'நம் பெருமையை இவன் உணரமாட்டான்' என்னும் எண்ணம் முருகனுக்கு உண்டாயிற்று. 'நம்முடைய திருவுருவத்தைக் கண்டாலே யாவரும் உள்ளம் கசிந்து உருகுவார்களே! இந்தப் பாவிக்கு அந்த நிலை வரவில்லையே' என்று எண்ணினான். அப்போது முருகப்பெருமானுக்கு ஒரு கருத்துத் தோன்றியது. 'நம்மை இவன் கண்கொண்டு பார்க்கவில்லை. நான் சின்னஞ் சிறிய உருவத்தில் இருப்பதனால் பெரிய கண்ணும், பெரிய உடம்பும் உடைய அசுரனுக்கு நம்முடைய அழகு புலனாகவில்லை' என்று எண்ணினான். அவனுடைய கண் நிரம்பும்படி பெரிய திருவுருவம் ஒன்றை எடுத்துக்கொண்டான். எப்படியாவது அவனுடைய உள்ளத்தை உருக்கவேண்டும், அறியாமையை ஒழிக்கவேண்டும் என்ற எண்ணத்தினால் அந்த அழகுப் பேருருவத்தை எடுத்துக் கொண்டான்.

நம்முடைய வீட்டில் எறும்புகள் சாரிசாரியாகப் போகின்றன. எறும்புக் கூட்டத்திலும் ஆண் பெண் உண்டல்லவா? எறும்பு இனத்தில் ஒரு கல்யாணம் நடப்பதாக வைத்துக் கொள்வோம். மாப்பிள்ளை எறும்பும் பெண் எறும்பும் ஊர்வலம் போகிறார்கள். மனித இனத்தில் மாப்பிள்ளை அழகு என்றால் எறும்பு இனத்திலும் மாப்பிள்ளை எறும்பு அழகாகத்தான் இருக்கும். ஆனால் நம் பார்வையில் எல்லா எறும்பும் ஒரேமாதிரியாகவே தோன்றுகின்றன. எறும்புகள் போகும் போது அவற்றின் உருவச் சிறப்பும், அழகும் நம் கண்ணுக்குப் புலனாவதில்லை; வெறும் உருவம் மாத்திரம் தெரிகிறது. அதுபோல் சூரபன்மனுடைய புறக்கண்ணின் எதிரே வந்து முருகன் நின்றபோதும், 'யாரோ குழந்தை இங்கே வந்திருக்கிறது' என்று எண்ணினானேயன்றி அவனுடைய பேரழகைக் காணுகின்ற ஆற்றல் அவனுக்கு இல்லை. அதனை உணர்ந்து முருகன் மிகப் பெரிய திருவுருவத்தை எடுத்துத் தன்னுடைய அழகு அவனுக்குப் புலனாகும்படி செய்தான்.

சூரபன்மன் நிமிர்ந்து பார்த்தான். ஆயிரம் ஆயிரம் கதிர்களை வீசிப் பரப்புகின்ற தேசுத் திருவுருவம் தன் முன்னே நிற்பதைப் பார்த்தான். இதுகாறும் அத்தகைய திருவுருவத்தை அவன் கண்டதில்லை. ஒருவனுக்கு அடி பணிந்து வளையவும், வியந்து அண்ணாந்து பார்க்கவும் அவனுக்குத் தெரியாது. நின்றால் நின்றபடியே பார்க்கும் தகைமையன். இப்போது மிக உயரமாக இருக்கும் முருகப்பெருமானின் திருவுருவத்தை அண்ணாந்து பார்த்தான். அந்தப் பேருருவத்தின் அடி எங்கே என்று குனிந்து பார்த்தான். பார்க்கும்போது, இதுகாறும் இத்தகைய பேருருவத்தைக் கண்டிலோமே என்ற வியப்பு உண்டாகியது. 'யாரோ சிறிய குழந்தை ஒரு மயில் குஞ்சின்மீது ஏறி வருகிறதென்று அல்லவா நினைத்தேன்? இவ்வளவு பெரிய அழகுத் திருவுருவத்தை உடையவன் முருகன் என்பதை இந்நாள்வரை நினைத்திலேனே!' என்று எண்ணி ஏங்குகின்றான்.

"கோலமா மஞ்ஞை தன்னிற்
குலவிய குமரன் தன்னைப்
பாலனென் றிருந்தேன் அந்நாள்;
பரிசிவை யுணர்ந்தி லேன்யான்;
மாலயன் தனக்கும் ஏனை
வானவர் தமக்கும் யார்க்கும்
மூலகா ரணமாய் நின்ற
மூர்த்திஇம் மூர்த்தி அன்றோ?"

என்று வியப்பு அடைகின்றான். இது, முதல் தோற்றத்தில் உண்டான வியப்பு; தான் சிறுவன் என்று கருதிய திருவுருவம் எல்லாப் பொருளுக்கும் மூலகாரணமாக இருக்கிற மூர்த்தியாகத் தோற்றினவுடன் தோற்றிய வியப்பு.

அதற்கப்புறம் அவன் தன்னுடைய கண்ணால் அப்பெருமானது ரூப லாவண்யத்தை நுகரப் போகிறான். மெல்ல ஒவ்வோர் உறுப்பாக அவன் கண் உலவுகிறது. எல்லை

கட்டிக் காணவொண்ணாத பரப்பும், எல்லை கட்டிச் சொல்ல முடியாத அழகும் உடைய அந்தத் திருவுருவத்தின் திருவடி முதல் திருமுடி வரையில் தன் கண்ணை ஓச்சுகிறான்; பக்கத்தில் ஓட்டுகிறான். திருக்கரங்களின் முடிவு காணவில்லை. திருமேனியின் எல்லை காணவில்லை. அழகை அநுபவித்து முழுமையும் காண முடியவில்லை. இந்த நிலையில் எம்பெருமானுடைய திருவழகில் ஈடுபடுகிறான். "உலகம் பைத்தியக்காரத்தனமாகக் காமனைப் பேரழகன் என்று சொல்கிறது. அழகுக்குத் தலை எல்லை மன்மதன் என்று அறியாமையினால் சொல்கிறார்களே! அந்த மன்மதன் எம்பெருமானுக்கு முன்னாலே நிற்க முடியுமா? எம்பெருமானுடைய திருவுருவம் முழுமையிலும் உள்ள அழகு கிடக்கட்டும்; அவன் திருவடியில் உள்ள அழகின் ஒரு பகுதிக்காவது ஆயிரம் கோடி மன்மதர்களுடைய அழகு எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து உருவம் எடுத்தாலும் ஒப்பாகுமா?" என்று ஈடுபட்டு அந்த அழகை வியக்கிறான்.

"ஆயிர கோடி காமர்
    அழகெலாந் திரண்டொன் றாகி
மேயின எனினும் செவ்வேள்
    விமலமாம் சரணந் தன்னில்
தூயஇவ் வெழிலுக் காற்றா
    தென்றிடின் இனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
    உவமையார் வகுக்க வல்லார்?"

இந்த அருமையான பாடலை இரண்டு மூன்று இடங்களில் ஆழ்ந்து பார்க்கவேண்டும். இறைவனுடைய பாதாரவிந்தங்களில் அவன் உள்ளத்தைச் செலுத்துகிறான். இதற்கு முன்னால் அசுரத் தன்மையோடு நின்றவன் அவன். இப்போதோ முருகப்பெருமானுடைய திருவுருவ அழகு அவனைக் கவர்ந்திருக்கிறது. அதனால் அவனுடைய உள்ளம் உருகு

கிறது. 'நம்முடைய திருவுருவத்தைக் கண்டாவது இவன் உருகமாட்டானு? உருகும் இயல்பு இருந்தால் இந்தப் போரை விரைவில் முடித்து இவனை ஆட்கொள்ளலாம்' என்று கருதித் தான் முருகன் தன் திருவுருவத்தைக் காட்டினுன். அந்த உருவத்தின் பேரழகு சூரபன்மனை மயக்கிற்று. அப்போது அவன் உள்ளம் உருகுகிறது. அடியார்கள் முருகப்பெருமானுடைய திருவுருவப் பேரழகைக் கண்டு கண்டு, பின்பு அவன் திருவடியைப் பார்த்து அதிலே தங்கள் உள்ளம் வண்டாக மொய்க்கக் கிடப்பார்கள். அதே நிலை சூரபன்மனுக்கு வந்துவிடுகிறது. முருகப்பெருமானது ரூப லாவண்யத்தை நன்ருகப் பார்த்து, முற்றக் கண்டு முடிவு பெருமையினுல் மெல்ல மெல்ல அவன் சரணத்திலே தன் கருத்தைப் பதிக்கிருன். அவன் கண்களிலே இதுகாறும் நின்ற மாசு அகலுகிறது. "அடடா! இந்தச் சரணம் விமலமாகிய சரணம் அல்லவா?" என்பது புலனுகிறது. மலச் சார்பற்ற, மலம் உள்ள இடத்தில் சார்ந்தால் அந்த மலத்தைப் போக்கக் கூடிய சரணம் அது. அந்தச் சரணத்தின் அழகு தூய அழகு.

அழகில் இரண்டு வகை உண்டு. புறக்கண்களில் பட்ட மாத்திரத்தில் சில அழகுகள் உள்ளத்தில் தூய எண்ணத்தை உண்டாக்கும்; சில அழகுகள் கெட்ட எண்ணத்தை உண்டாக்கும். உள்ளத்தில் கெட்ட எண்ணத்தை உண்டாக்குகிற அழகு மாய அழகு; அது தூய அழகாகாது. அப்படியின்றித் தூய எண்ணங்களை உள்ளத்தில் உண்டாக்குகின்ற அழகு எதுவோ அதுதான் தூய அழகு என்று சொல்லப்படும். சித்திர மாதர்களுடைய அழகு மாய அழகு; மீட்டும் மீட்டும் பிறப்புக்கும் இறப்புக்கும் காரணமாக்கும் அழகு; உள்ளத்தில் வெறியை ஊட்டும் அழகு. கற்புடைய மகளிரின் அழகு அத்தகைய மாசை உள்ளத்தில் உண்டாக்காது. அத்தகையவர்களைக் கண்டால் நம்முடைய அன்னையைக் காண்பது போன்ற உணர்ச்சி உண்டாகும். அல்லாதவர்களுடைய அழகு

வெறியை ஊட்டுவதனுலே அதை மாய அழகு என்று சொல்லலாம். வெறியை அடக்கி, அமைதியைப் பெற வைத்துத் தூய இன்பத்தை உண்டாக்குகின்ற பேரழகே தூய அழகாகும்.

இத்தகைய தூய பேரழகை உடையவன் முருகன். அது எதனுல் தெரிகிறது? முருகனுடைய பேரழகில் தன் உள்ளத்தைப் புதைத்து நிற்கிருன் சூரபன்மன். ஒவ்வோர் உறுப்பாக அவன் கண் பார்த்து வரும்போதே அந்த அழகு அவன் உள்ளத்தைத் தூய்மைப் படுத்துகிறது. மேலேயுள்ள கந்தையை விசிறி எறிந்து, தலையில் உள்ள பாரத்தை எல்லாம் தூக்கி எறிந்து, மனத்தில் உள்ள அழுக்கு நீங்க, உடம்பு லேசாகத் தோற்ற நிற்கின்ற ஒரு வகை இன்பம் அவனுக்குத் தோற்றுகிறது. ஆகவே,

"விமலமாம் சரணம் தன்னில் தூய இவ் வெழிலுக்கு"

என்று சொல்லும்போது அவன் ஒரு வகையான இன்பக் கிளுகிளுப்பில் நிற்கிருன்.

"தூய இவ்வெழில்"

என்று சொல்வதில் ஒரு நயம் இருக்கிறது. முருகப்பெருமானை அவன் நெருங்கிவிட்டான். கடவுளை 'அவன் அவன்' என்று வேதம் சொல்கிறது. அவனை நெருங்கிய அன்பர்கள் 'இவன்' என்று சொல்வார்கள். சூரபன்மன் இதற்கு முன்னுல் முருகப் பெருமானின்முன் நின்ருலும் இதுவரைக்கும் நெருங்கவில்லை. ஆயிரம் காத தூரம் விலகி நின்றவனைப் போல நின்ருன். இப்போது எம்பெருமானின் அழகில் ஈடுபட்டு அடியார்களைப் போல உள்ளுணர்ச்சி கொண்டதால் நெருங்கிவிட்டான். முருகப்பெருமானுடைய கை எட்டும் தூரத்தில் நிற்கிருன். கருத்துக்கு எட்டும் அண்மையில் இருக்கிருன். ஆகவே 'இந்தத் தூய எழில்' என்று அண்மைச் சுட்டைப் போடுகிருன்.

அந்தத் திருவுருவத்திலே உள்ளத்தை ஈடுபடுத்தி நின்றவனுக்கு மெல்ல மெல்ல அவன் தீமைகள் எல்லாம் ஒழிகின்றது தெரிகிறது. உலகம் எல்லாம் தன்னுடையன என்று எண்ணினவன் அவன். நான் என்ற அகங்காரம், எனது என்ற விரிவான மமகாரம் இரண்டும் அவனிடத்தில் தலைதூக்கி நின்றன. அந்த எனது என்பதற்குள் ஆயிரத்தெட்டுக் கோடி அண்டங்களை அடக்கி அமைத்தும் போதாமல் தேவேந்திர லோகத்தையும் அகப்படுத்திக்கொள்ள முயன்றவன். இப்போதோ எங்கே பார்த்தாலும் தான் என்ற உணர்வு மறைந்து எனது என்ற மமகாரம் போய் எல்லாம் இறைவன் மயமாக அவனுக்குத் தோன்றுகின்றன. அவன் உள்ளத்தில் புதிய அறிவு புகுகின்றது. சூரியோதயம் ஆனவுடன் எப்படி இருள் அகன்று விடுகிறதோ அப்படி எம்பெருமானின் பேரழகுத் திருவுருவம் அவனுக்குத் தோன்றியவுடன் அவன் உள்ளத்தில் உள்ள அறியாமை இருள் அகன்று விடுகிறது. அவ்வழகு அவன் உள்ளத்தில் புதிய ஞானத்தை உண்டாக்குகிறது. அந்த ஞானத்தோடு நான்கு திக்கிலும் திரும்பிப் பார்க்கிறான். இதுவரைக்கும் அவனுக்குத் தோற்றிய காட்சிகளாக இல்லாமல் புதியனவாகத் தோன்றின. நான் எனது என்ற இரண்டு பற்றுக்களும் தொலையவே முருகன் நினைவு ஒன்றே தலைதூக்கி நிற்கிறது. புதியதாகப் போதம் புகுந்தது. பிரபஞ்சம் எல்லாம் அவனுக்கு இப்போது புதியதாகத் தோன்றுகின்றதைக் காண்கின்றான். அவனுக்கு வியப்பு உண்டாகிறது.

"போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான
தூயதோர் தோளும் கண்ணும் துடித்தன புவன மெங்கும்
மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்
நாயகன் வடிவம் கண்டேன் நற்றவப் பயனீ தன்றோ?''

என்று அந்தப் பேரானந்தக் கொந்தளிப்பில் பேசுகின்றான். "பலகாலம் நல்ல தவம் செய்து அதனால் பெறுவதற்குரிய பேறு அல்லவா இது? எம்பெருமான் தன்னுடைய திருக்

கோலப் பேரெழிலைக் காட்டிக்கொண்டு முன்வந்து நிற்கும் பாக்கியம் அவனுடைய பகைவனாகிய, மாபாவியாகிய எனக்கும் கிடைத்ததே'' என்று இறைவனுடைய கருணையை எண்ணி ஆச்சரியமுறுகிறான். போதம் புகுந்தவுடன் இது வரைக்கும் தனக்குத் தோன்றிய புவனம் இப்போது வேறு பட்டுத் தோன்றுகிறதைக் காண்கிறான். இதுவரைக்கும் அவனுக்குத் தோன்றியது மாயத் தோற்றம்; இப்போது தான் உண்மையான தோற்றம் புலனாகிறது. பிரபஞ்சம் இதுவரைக்கும் தனக்குச் சொந்தம் என்றும், தானே எல்லா வற்றுக்கும் தலைவன் என்றும் எண்ணிக் கொண்டிருந்தான் அவன். இப்போதோ நாயகனைக் கண்டவுடன் தன் நிலை புலனாகிறது. ''அவன்தான் இறைவன்; நான் அடிமை'' என்ற உணர்ச்சி தோன்றுகிறது. இதன் மூலகாரணம் அவன் கண்ட எம்பெருமானுடைய தூய பேரழகுக் கோலந்தான்.

பின்பும் அவன் பார்க்கிறான். முருகப் பெருமானின் திருமேனிக்குப் பக்கத்தில் சென்று பார்க்கிறான். பின்னே நின்று பார்க்கிறான். மேலே அண்ணாந்தும், கீழே குனிந்தும் பார்க்கிறான். இன்னும் அந்த அழகுக்கு முடிவு கட்ட முடிய வில்லை. எத்தனை காலம் பார்த்தாலும் அந்த அழகை முற்றும் பார்த்துத் திருப்தி அடைய முடியாது என்ற உண்மை புலனாகிறது. காலத்தினாலும், இடத்தினாலும் எல்லை கட்டி அறிய முடியாத அருள் வடிவம் அல்லவா அது? அதனைக் கண்டு கண்டு அவன் கண்கள் இன்புறுகின்றன. கருத்து இன்பப் பொங்க லிடுகிறது. ஆனால் எல்லை இன்னது என்று தெரியாமல் வியப்பில் மீதூர்ந்து நிற்கிறான்.

> "அண்ணலார் குமரன் மேனி
> அடிமுதல் முடியின் காறும்
> எண்ணிலா ஊழி காலம்
> எத்திறம் நோக்கி னாலும்

கண்ணினுல் அடங்கா துன்னிற்
கருத்தினுல் அடங்கா தென்பால்
நண்ணினுன் அமருக் கென்கை
அருளென நாட்ட லாமே''

இறைவனுடைய பேரழகைக் கண்ட மாத்திரத்தில் அவனுக்கு உருக்கமும் உணர்வும் அடியார்களுக்கு உண்டாவதுபோல உண்டாயின என்ருல் சற்று முரணுகத் தோற்றலாம். பல காலம் இந்திரிய நிக்கிரகம் செய்து விரதம் காத்து, தவம் செய்கின்றவர்களுக்குக் கிடைக்க வேண்டிய இந்தக் காட்சி இந்தப் பாவிக்குக் கிடைக்கலாமா என்ற கேள்வி எழுவதற்கு நியாயம் உண்டு. ஆனுல் அந்தத் தவம் நிறைந்தவர்கள் யாவரும் தம்முடைய முயற்சியினுல் இறைவனைக் கண்டு கொள்ள வேண்டுமென்று இருப்பார்கள். இங்கேயோ சூரபன்மன் முயலவில்லை. எம்பெருமானே அவனை ஆட்கொள்ள வேண்டுமென்று முயன்ருன். முருகனைச் சூரபன்மன் சென்று காணவில்லை. சூரபன்மனிடம் வந்து முருகன் தன் திருவுருவத்தைக் காட்டினுன்.

ஓர் அறை பலகாலமாகப் பூட்டி வைக்கப்பட்டிருந்தது. அந்த அறைக்குள் விளக்கை எடுத்துக்கொண்டு போனுல், "பலநாள் இருள் மண்டிக் கிடந்த அறை ஆயிற்றே; அதனுல் பலநாட்கள் விளக்கின் ஒளி அங்கே பட்டால்தான் இருள் நீங்கும்'' என்று சொல்லலாமா? விளக்கைக் கொண்டு போனவுடன் எத்தனை காலமாக இருள் மண்டிக் கிடந்தாலும் ஒளிபட்டபோதே இருள் ஓடிவிடுகிறது. அதுபோல, எத்தனையோ காலமாக அறியாமை இருள் மண்டிக்கிடந்த உள்ளம் உடையவனுகச் சூரன் இருந்தாலும் அருள் ஒளிப் பிழம்பாகிய எம்பெருமானின் தரிசனம் கிடைத்த மாத்திரத்தில் அவன் அறியாமை நீங்கியது. போதம் புகுந்த பிறகு அவனுக்கு உண்மை தெளிவாகிறது.

"என்னுடைய முயற்சியினால் முருகப்பெருமானுடைய காட்சியை நான் கண்டேன் இல்லை. அவன் தன் திருவருளால் ஆட்கொள்ள எண்ணினன். வேறு எந்த வகையினாலும் என்பால் அருள்பாலிக்க ஒண்ணாது என்றல்லவா அமருக்கு நண்ணினான். இதுதான் அவனுடைய பேரருள் என்று நாட்டலாம்" என்கிறான். "நான் அவனைக் காணவேண்டு மென்று நினைக்கவில்லை. தன்னை எனக்குக் காட்டவேண்டு மென்று அவன் உறுதியாக நினைத்தான். அவன் உள்ள இடத்திற்கு நான் போகவில்லை; நான் உள்ள இடத்திற்கு அவன் வந்தான். போர்க்களத்தைக் கோயிலாக்கி, போரைத் தரிசனம் ஆக்கி, பகைவன் இவன் என்ற உணர்வுடன் வாராமல், எனக்கு அருள் செய்ய வேண்டுமென்று வந்திருக்கிறான். போரை வியாஜமாகக் கொண்டு எனக்குக் காட்சிதர வந்தானே"

"நண்ணினான் அமருக் கென்கை அருளென நாட்ட லாமே"

என்று கூறுகிறான்.

பின்பு அந்தப் பெருமானைப் போய் அடைந்து காலில் விழவேண்டுமென்ற எண்ணம் தோன்றியது. இறைவன் சிறிது திரையைப் போட்டவுடன், "மானம் தடுக்கிறது" என்று சொல்லி மீட்டும் போர் செய்கிறான். குறுகிய காலத்திற்குள் அவனை அடர்த்து வேலால் சூரத்துவத்தைப் போக்கி மயிலாகவும் சேவலாகவும் ஆக்கிக் கொள்கிறான் முருகன்.

அகங்கார மமகாரப் பிழம்பாகிய சூரபன்மாவைக்கூட வசப்படுத்தி, உள்ளம் உருகும்படியாகச் செய்தது முருகப் பெருமானது பேரழகு. பகைவனாகிய சூரபன்மனே இந்த அழகைக் கண்டு வேறு யாரும் சொல்ல முடியாத அளவில் பாராட்டியுள்ளான்.

முருகப் பெருமான் உண்மையான பேரழகு உடையவன். அந்த அழகைப் பகைவனாகிய சூரனே பாராட்டுகிறான்.

ஆகையால் அந்தப் பேரழகு கால எல்லை கடந்து, இட எல்லை கடந்து ஒளிர்வதோடு, அன்பர்கள், நொதுமலர்களுடைய உள்ளங்களை உருக்கிப் பகைவரையும் உருக்குவது என்ற உண்மையைத் தெரிந்துகொள்ளலாம். ''உண்மையான பேரழகன் முருகன்; உறுதியான பேரழகன் முருகன்; பயன் தரும் பேரழகன் முருகன்'' என்பவற்றை எல்லாம் இந்த வரலாற்றினுல் தெரிந்து கொள்ளலாம்.

# வேல் எடுத்த வேள்

மனிதன் எதையாவது செய்ய வேண்டுமென்று நினைக்கிறான். பல சமயங்களில் அவன் அதை மீட்டும் மீட்டும் நினைப்பதில்லை. அதனால் அந்த நினைப்புச் செயலாக மாறுவதில்லை. எண்ணிய எண்ணத்தில் திண்மை இன்மையால் செயலாக மாறி அதில் வெற்றியடையுமட்டும் அந்த எண்ணம் சிதறாமல் இருப்பதில்லை. பல சமயங்களில் அவன் ஒன்று நினைக்க வேறு ஒன்று நடக்கிறது. திண்ணிய நெஞ்சத்தில் எண்ணி, அந்த எண்ணத்தைப் பலகாலும் எண்ணி உரம் ஏற்றி, செயலில் இறங்கி, தளராது முயன்று உழைப்பவர்களுக்குக்கூட எண்ணிய அளவுக்கு வெற்றி கிடைப்பதில்லை. 'அஞ்சுக்கு இரண்டு பழுதில்லை' என்பது போல ஓரளவு வெற்றி கிடைத்தாலே போதும் என்ற நிறைவு உண்டாகி விடுகிறது. ஒரே சமயத்தில் பல வேலைகளில் ஈடுபடுகிறவர்களுக்கு எதுவும் முற்றுவதில்லை. ஒரே செயலில் ஈடுபடுகிறவர்களுக்கோ எண்ணிய அளவில் குறைவாகவே பயன் கிடைக்கிறது. இவ்வளவும் மனிதனது ஆற்றல் சிறியது என்பதைக் காட்டுகின்றன. அற்பசக்தி உடையவன் அவன்.

இறைவனே எல்லாம் வல்லவன்; சர்வசக்திமான். அவன் ஒரே சமயத்தில் உலகம் முழுவதும் இயங்கப் பண்ணுகிறான். அந்த அந்தப் பொருள்கள் தம்தம் இயல்புக்கேற்ப இயங்கும்படி ஆணை செலுத்துகிறான். அவனுடைய பேராற்றலே அதற்குக் காரணம். வரம்பிலா ஆற்றலுடையவன் கடவுள் என்பர் பெரியோர்.

முருகப் பெருமானுடைய பேராற்றலை முற்றும் உணர்ந்து கொள்ளும் வாய்ப்பும் அறிவும் நமக்கு இல்லை.

ஆயினும் கந்த புராணத்தாலும், அருணகிரியார் முதலிய அநுபூதிமான்களின் திருவாக்குக்களாலும் ஓரளவு தெரிந்து கொள்கிறோம். ஆயிரத்தெட்டுக் கோடி அண்டங்களை ஆண்டு அறுபத்தாறு கோடி அசுரர்களைத் தன் சேனுவீரர்களாகக் கொண்ட மாயாவியாகிய சூரபத்மனை முப்பத்து முக்கோடி தேவர்களால் அழிக்க முடியவில்லை. எல்லோருக்கும் வரம் வழங்கி வலியராக்கும் அவர்கள் வலிமை சூரனுக்குமுன் மங்கியது. இந்திரனுடைய ஆயுதங்கள் சூரனுடைய மாயத்துக்குமுன் ஒன்றும் செய்ய இயலாதவையாயின. அத்தகைய வலிமையுடைய சூரபன்மனை முருகன் அழித்தான். வேலை வீசி அவனை மாய்த்தான். சூரசங்காரம் என்பது தேவர்களுக்கு வியப்பைத் தரும் செயல். இறைவனுக்கோ விளையாட்டு.

முருகன் சூரனை அழித்த வீரத் திருவிளையாட்டை அழகுபடப் பரஞ்சோதி முனிவர் பாடுகிறார்.

முருகன் ஆறுமுகம் உடையவன். அவன் ஒரே சமயத்தில் ஆறு காரியங்களை நிகழ்த்தும் வன்மை உடையவன். ஆறுமுகன் வேலை எடுத்து வீசியதால் ஆறு நிகழ்ச்சிகள் நிகழ்ந்தனவாம். மறம் என்பது வீரம்; மறங்குலவு வேல் எடுத்து வீசிய குமரவேளின் திருவடிகளை வணக்கம் செய்கிறார் முனிவர்.

முருகன் வேலை ஓச்சினபோது ஆறு இடங்களில் ஆறு விளைவுகள் உண்டாயின. அந்த ஆறையும் மூன்று பிரிவாக்கி ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டை அடக்கினார். முருகன் வேலை எடுத்து வீசியதால் இரண்டு கடல்கள் கலங்கினவாம்; இரண்டு மலைகள் பிளந்தனவாம்; இரண்டு தழல்கள் மூண்டனவாம். இந்த இரட்டைகளில் ஒன்று இயல்பானது; மற்றொன்று உருவகம்.

சுழலுகின்ற அலைகளையுடைய கடல் கலங்கியது. சூரபன்மன் பலவகையில் போர் செய்து செய்து தோல்வியையே

அடைந்தான். பல்வேறு உருவங்களை எடுத்துப் போராடினன். அவ்வளவையும் முருகன் குலைத்தான். இறுதியில் அசுர வேந்தன் ஒரு மாமரமாகி உருவெடுத்துக் கடலுக்குள் ஒளிந்து கொண்டான். அப்போது முருகன் தன் வேலை விட்டான். அது முதலில் அந்தக் கடலைக் கலக்கிச் சுவறச் செய்தது. அதனால் உள்ளே புகுந்திருந்த சூரன் மறைவின்றி வெளிப் பட்டான். இது இயற்கைக் கடலின் அழிவு.

முருகன் அவுணக் கூட்டத்தை அழித்தான். சிங்க முகன், தாருகன், பானுகோபன், அவர்கள் தலைமையில் போரிட வந்தவர்கள் யாவரும் அழிந்தனர். அறுபத்தாறு கோடிபேர் அசுரர்கள் என்றால் அந்தக் கூட்டம் சிறியதாகவா இருக்கும்? பெருங்கடல் போல் படர்ந்து பெருகி நின்றது. அந்தக் கடலையும் தன் வேலால் முருகன் அழித்தான். இது உருவகக் கடலின் அழிவு.

> கறங்குதிரைக் கருங்கடலும்
> காரவுணப் பெருங்கடலும் கலங்க.

★

அடுத்தபடி இரண்டு மலைகள் பிளந்ததைச் சொல்கிறார். முருகன் கிரௌஞ்ச மலையைப் பிளந்தான். கிரௌஞ்சம் என்பது அன்றிற் பறவைக்குப் பேர். ஓர் அசுரன் அன்றில் வடிவத்தில் இருந்த மலையாக இருந்தான். அவனுக்குக் கிரௌஞ்சாசுரன் என்று பெயர். அந்த மலை எப்போதும் பறந்துகொண்டே இருக்கும். மக்கள் நிரம்பியுள்ள இடத்தில் மேலிருந்து வந்து தங்கும். அதன்கீழ் அகப்பட்டுப் பல்லாயிர மக்கள் சாவார்கள். அன்றில் இணைபிரியாத அன்புக்கு உதாரணமாக விளங்குவது. அதன் உருவத்தை எடுத்துக் கொண்டவன் அசுரனாதலின் நேர்விரோதமாகப் பகையை யும் பயத்தையும் அழிவையும் வளர்த்தான். அந்த மலையின்மேல் வேலை ஓச்சிப் பொடிப் பொடியாக்கினன்

முருகன். இது இயற்கையான மலையைப் பிளந்த திரு விளையாடல்.

கிரௌஞ்ச மலைக்குள் ஒளிந்துகொண்டு மாயம் செய்தான் சூரபன்மன். கிரௌஞ்ச மலையைக் குத்திச் சென்ற வேல் சூரபன்மனுடைய மார்பையும் குத்திப் பிளந்தது. அந்த அசுரனுடைய நெஞ்சு உள்ளும் புறமும் கல்லைப் போன்றது; மலையைப்போலக் கடினமானது; ஈரமற்றது. அதையும் துளைத்துப் பிளந்தது முருகனது மறங்குலவு வேல். இது உருவக மலையைப் பிளந்த திருவிளையாடல்.

கார்வந்து
உறங்குசிகைப் பொருப்பும்சூர்
உரப்பொருப்பும் பிளப்ப.



இவற்றோடு இரண்டு தழல்கள் மூண்டனவாம். முருகன் வேள்வியைக் காப்பாற்றும் அருளையுடையவன்.

"அந்தண்மறை வேள்வி காவற்கார"

என்று அருணகிரி முனிவர் பாடுவார்.

"ஒருமுகம்
மந்திர விதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்விஓர்க் கும்மே"

என்பது திருமுருகாற்றுப் படை.

வேள்வி செய்து அமரர்களுக்கு அவியை அளிப்பது அந்தணர் தொழில். வேள்வியால் அவியுணவு பெறும் தேவரை, "அவியுணவின் ஆன்றோர்" என்று கூறுவார் வள்ளுவர். அவர்களுடைய உணவைத் தட்டிப் பறிக்கக் காத்திருப்பவர் அசுரர்கள். தேவர்களுக்கும் அவுணர்களுக்கும் பகையாதலால் தேவர்கள் உணவுபெறும் வேள்விகளைக் குலைக்க அசுரர் முந்துவர். விசுவாமித்திர முனிவன் செய்த

வேள்வியைக் குலைக்க வந்த அரக்கரை இராமன் மாய்த்த கதை இராமாயணத்தில் வருகிறது.

அசுரர் வேள்வியை அழிக்க வந்தால் அவர்களை அழித்துத் தேவர் தம் உணவைப்பெறும்படி அருள்பவன் முருகன். அதனால் அவனை வேள்வி காவலன் (பரஸ்தோமரக்ஷன்) என்று பெரியோர் கூறுவர். வேள்வியில் 'சுப்ரம்மண்யோம்' என்று மும்முறை கூறி ஓமம் செய்வது மரபு. முருகன் வேள்வியைக் காப்பாற்றும் பெருமான் என்னும் எண்ணத்தால் இவ்வாறு சிறப்புச் செய்கிறார்கள் வேட்கும் அந்தணர்.

முருகன் அசுரர்களை அழித்ததனால் அவர்களால் வரும் இடர் இன்றி முனிவர் வேள்வி செய்கின்றனர். வேள்வித் தீ யாதொரு தடையும் இன்றி வானளாவ எழுந்து மூள்கின்றது. இது இயற்கையான தழலின் வளர்ச்சி.

சூரனும் பிற அசுரர்களும் மாய்ந்தமையால் அவர்களுடைய மனைவிமார் மங்கலம் இழந்தனர். அசுரர்களோடு ஒன்றி இன்புற்ற வாழ்வு குலைந்தது. "இப்படி நேர்ந்ததே" என்று அவர்கள் பொருமுகிறார்கள். வயிற்றில் பகீரென்று தீப் போன்ற துயரமும் அச்சமும் ஓங்குகின்றன. இது உருவகத் தீயின் எழுச்சி.

> மறை உணர்ந்தோர் ஆற்றும்
> அறம்குலவு மகத்தழலும்
> அவுணமடவார் வயிற்றின் அழலும் மூள.



இவ்வாறு இரண்டு கடல் கலங்க, இரண்டு வரை பிளப்ப, இரண்டு தழல் மூள ஆறுமுகத்தையன் திருவிளையாடல் செய்தான். அவன் வேலெடுத்து ஓச்சினவுடன் ஆறுமுகமாக அதன் விளைவுகள் தோன்றின. திருவிளையாடற் புராணத்தில் பரஞ்சோதியார் இப்படி முருகனை வணங்குகிறார்.